# Kalki Shopping Page

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at:*
**TV TRADERS**
Alwarpet,
Madras 600 018 Phone: 71238
Anna Nagar, Madras 600 040

*While others are busy talking about their TV sets, we are busy selling ours!*

**Bharat TV**

*more performance than promises.*



*Available at:*
**VIVEK & CO**
Purasawalkam, Madras-600 007
Phone: 662462/663545
Mylapore, Madras 600 004
Phone: 76923/75661.

ACIL BT 30/79

How to buy
the best TV in town?
**Read other**
**TV advertisements.**

**Then come and**
**see ours 'live'!**

**Bharat TV**



*Available at*
**ARUNA & CO**
Tiruvottiyur
Ph: 553644

வாங்கிடுவீர்!
இந்தியாவின்
சிறந்த பொருட்களை

**விஜிபி** யில்!



**ALLWYN**

ஆல்வின் ரெப்ரிஜிரேட்டர்

இந்தியாவில் மிக அதிகமாக விற்பனையாகும்
ஒரே ரெப்ரிஜிரேட்டர். எல்லா வகையிலும்
ஒரு புரட்சிகரமான மாறுதலை உடையது.
ஆட்டோமாட்டிக் டிஃப்ரோஸ்ட், தனித்தன்மை
வாய்ந்த "ரோல்-பாண்ட்" ஃப்ரீஸ் மற்றும்
உன்னதமான கம்ப்ரெஸர். உங்கள் தேவைக்
கேற்ப ஏழுவிதமான மாடல்கள்.

விஜிபிக்கு இன்றே வருகை தாருங்கள்!

**வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ.**
அண்ணா சாலை (812121)
சைதாப்பேட்டை (442333)
தி. நகர் (440246) ரட்டன் பஜார் (39649)

national 781

# Kalki Shopping Page

## HMV STEREO POPULAR II



Rs. 1,037/-
Max. Rec. Ret.
Price incl.
Excise Duty.
Taxes extra.



**HMV STEREO SYSTEMS**

*Available at :*

**K. N. NARAYANA RAO & SONS,**
14, Arunachala Asari St.
Salem-1 Ph : 2859

**GUPTA CORPORATION,**
14, Bazaar Street,
Salem-1 Ph : 4137

**GUPTA ELECTRONICS,**
C. S. I. Bldgs, Opposite M. F. S.
Fort Main Road, Salem-1 Ph : 8242

**JAI MUSICALS,**
342A. Trichy Main Road,
Salem-6 Ph : 3676, 4737



**பார்த்தாஸ்**
**டெக்ஸ்டைல்ஸ்**

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

**பார்த்தாஸ்**
**நாகர்கோவில்**

கோட்டையம், எர்ணாகுளம்,
சங்கணாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் S.K.K.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar

## SUKI ELECTRONICS

Best Place to Choose your

**STANDARD**
**Solidaire**
**televista** TV sets



★ Available on cash or easy instalment

Cost of Antenna, installation & delivery charges **FREE** for cash purchases.

**SUKI ELECTRONICS**

16, Veeraraghavan Street,
Nanganallur,
Madras 600 061.

C-3, Kapaleeswarar Shopping Complex, V.A. Road,
Near Saibaba Temple
Mylapore, Madras 600 004.
Phone : 433019.

# Kalki Shopping Page

பண்டிகைக்
காலங்களில்
நாகரீகத்தின்
சிகரம்...

பிரிண்டட் சில்க்,
காஞ்சீபுரம், பனாரஸ்,
கஜ்ஜிஸ், மணிபுரி
மற்றும் தான்சேயி

எம்பிராய்டெர்ட்
செய்யப்பட்ட புடவைகள்,
பட்டு ஆர்கன்ஸாஸ்,
சிஃபான்ஸ், மற்றும்
சாட்டின்-சிஃபான்ஸ்.

அமெரிக்கன்-ஜார்
ஜெட்டுகள்,
ஜாரி-கோட்டாஸ்
மற்றும் பற்பல தினுசுகள்.

**கலா மந்திர்**

பண்டிகைக் கால புடவைகளுக்கு



அந்நிய நாட்டு
கரன்சிகள்
ஏற்றுக்
கொள்ளப்படும்

827, அண்ணாசாலை, சென்னை 600 002 போன்: 89983

national 796

USHA

DYANORA

CROWN TV

mecom

ALLWYN

Sumeet

Westerly

Rallifan

ALMONARD

khaitan

**Elite RADIOS**

17. RANGANATHAN STREET.
T.NAGAR. Phone: 445649

Prestige

BUSH

NELCO

murphy

ORIENT fans

UMS

# பொறியைத் தட்டியதுமே...







காம்ப்டாலக்ஸ் ஸ்பாட்லைட
துணிகளின் டிஸைன்களைத் தனித்
தொளிரச் செய்கிறது—பார்ப்பவ-
ரைக் கவர்ந்திழுக்கும் வகையிலே.



உங்கள் வைரங்களிலே
மேலும் அதிக ஜொலிப்பு—
காம்ப்டாலக்ஸ்
ஸ்பாட்லைட் மூலம்.

PE-.-4365




காம்ப்டாலக்ஸ், எடுத்துப் பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ இணைப்புகளோ தேவையில்லை. பொருத்துங்களேன், பொறியைத் தட்டியதும், அதன் விற்கும் திறனை அறியலாமே!

1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**

X-RAY

# சவான்

'**கா**த்திருக்கும் காலமெல்லாம் காத்திருந்து கடைசியில் கழுநீர்ப் பானையில் கை விட்டானும்' என்று ஒரு வழக்கு மொழி தமிழில் உண்டு. பதவி ஆசையால் ஜனதாவை உடைத்துப் பிரதமராகியுள்ள சரண் சிங் பின்னல் சவான் போயிருப்பதைக் காணும்போது இந்தப் பழமொழி நினைவுக்கு வருகிறது.

இன்றைய காபந்து சர்க்காரில் துணைப் பிரதமராக விளங்கும் திரு யஷ்வந்த்ராவ் பல்வந்த் ராவ் சவானுக்கு வயது அறுபத்தி ஆறு.

தேவனின் துப்பறியும் சாம்பு மிகச் சாதாரணமாகச் செய்யும் காரியங்கள் மிகப் பெரிய துப்பறியும் கண்டு பிடிப்புகளாய் முடிந்து விடும்!

திரு சவான் உதவிப் பிரதமரான கதையும் இதுதானே!

ஜனதா அரசுக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார் சவான்.

வலுவான காரணங்களே இல்லாத நம்பிக்கையில்லாத் தீர்மானம் அது. இதே நேரத்தில் பதவியையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்ட ராஜ்நாராயண், சரண் சிங் கோஷ்டி வெளியேற ஜனதா உடைந்தது. மொரார்ஜி ராஜிநாமாச் செய்து விட்டார்.

ஜனாதிபதி சவானை அழைத்து அரசு அமையுங்கள் என்றதும் சவானுக்குத் தலையும் புரியவில்லை, காலும் புரியவில்லை. நாலு நாள் சவான் பட்ட அவஸ்தை நல்ல ஜோக்.

கடைசியில் சரண் சிங்குடன் சேர்ந்து துணைப் பிரதமர் ஆனதுதான் 'சாம்பு' கதையின் உச்ச கட்டம்.

1977 பொதுத் தேர்தல்களில் காங்கிரஸ் தோல்வி யடைந்த பிறகு நாடாளுமன்றத்தில் கண்ணியமான எதிர்க் கட்சித் தலைவராக இருந்த திரு சவான், திருமதி இந்திரா காந்தியின் எதேச்சாதிகார நோக்கையும் போக்கையும் கட்சிக்குள் எதிர்த்து வந்தார். 1978 ஜனவரியில் காங்கிரஸ் மறுபடியும் உடைந்து காங்கிரஸ் (எஸ்), காங்கிரஸ்(ஐ) என்றானது.

பின்னர் நாடாளு மன்ற எதிர்க் கட்சித்தலைவர் பதவி பறி போய், திரு சவான் 'எங்காத்துக்காரரும் கச்சேரிக்குப்போகிறார்' என்பது போல் நாடாளுமன்றத்துக்குப்போய் வந்து கொண்டிருந்தார். தேவராஜ் அர்ஸுக்கும் இந்திராவுக்கும் லடாய் ஏற்பட்டு கர்நாடகா காங்கிரஸ் தோன்றியபின் நாடாளுமன்றத்தில் மறுபடியும் எதிர்க்கட்சித் தலைவரானார் சவான்.

இந்த அரசியலெல்லாம் எப்படியானாலும் மனுஷன் தங்கமானவர். லஞ்சம், ஊழல் என்று எந்த விதக் குற்றச்சாட்டும் எந்தக் காலத்திலும் கிடையாது. நல்ல பேச்சுத்திறனும் மனோதிடமும் உள்ளவர். 1978ல் இந்திரா காந்தியை எதிர்த்துத் துணிச்சலாக நின்றதே சான்று எனலாம். ஆனால் நெருக்கடி காலத்தில் இந்தத் துணிவு எங்கே போயிற்று?

பிளவுபடாத பம்பாயின் முதலமைச்சராக இருந்து, மகாராஷ்டிரம் பிரிந்த பிறகு அம்மாகாணத்தின் முதல்வர் பதவியை வகித்து 'நவீன சிவாஜி' என்று போற்றப் பட்டவர். மத்திய அமைச்சரவையில் திரு வி. கே. கிருஷ்ணமேனன் வெளியேறிய பிறகு திரு நேருவால் மத்திய அரசுக்கு அழைக்கப் பட்டுப் பாதுகாப்பு அமைச்சராக்கப்பட்டவர்.

அதிலிருந்து 1977ல் காங்கிரஸ் தோற்கும் வரை பாதுகாப்புத் துறை தவிர, நிதி, உள் துறை, வெளி நாட்டு உறவு போன்ற முக்கிய இலாகா அமைச்சர் பதவியை வகித்தவர்.

ஹரியானா சட்ட சபையில் சில வருடங்களுக்கு முன்பு 'ராம்' என்று முடியும் பெயர் கொண்ட இரண்டு அங்கத்தினர்கள் அடிக்கடி கட்சி மாறிக்கொண்டே இருப்பார்களாம். அவர்களைக் கேலியாக ஹிந்தியில் 'ஆயா ராம், கயா ராம்' (வரும் ராம், போகும் ராம்) என சவான் குறிப்பிட்டார்.

இம்மாதிரி கேலி செய்தவர், அந்த இரண்டு 'ராம்'களைச் சாப்பிட்டு ஏப்பம் விடும் விதமாக நடந்து கொள்ளும் தலைவருக்குப் பக்கபலமாக நிற்பதைக் காணும் போது மனம் மிகவும் கஷ்டப் படுகிறது.

ஹரே ராம்!

— பி. ரங்கநாயகி



# முகமது அலி போட்ட நிபந்தனைகள்!

## "சலன்"

ரொம்ப நாளைக்குப் பிறகு நடிகை சுபாவை ஏவி. எம். ஸ்டுடியோவில் சந்தித்தேன். ''என்ன தமிழ்ப்படத் துறைப் பக்கமே ஆளைக் காணோம்?'' என்று நான் கேட்க, ''தயாரிப்பாளர்கள் கூப்பிட்டால் நான் நடிக்க மாட்டேன் என்றா கூறுகிறேன்? தமிழில் வந்த ''தப்புத் தாளத்தை'' மலையாளத்தில் எடுத்து வருகிறோம். நான் சரிதாவின் வேடத்தில் நடிக்கிறேன். நான் ஏன் தமிழ் படத்தில் நடிக்கவில்லை என்பதற்குத் தயாரிப்பாளர்களும் காலமும்தான் பதில் கூற வேண்டும். ஆனால் ஒன்றை நீங்கள் கவனித்தீர்களா? எனக்கு ஒரு காலத்தில் தமிழ்ப் படங்கள் அதிகமாக இருந்தன. இன்று மலையாளப் படங்கள் அதிகமாக இருக்கின்றன. மலையாளப் படங்களில் அதிகமாக நடித்து வந்த ரீனா இன்று மலையாளப் படத்தை விடத் தமிழ்ப் படங்களில் அதிகமாக நடிக்கிறார். இவை காலத்தின் கோலம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?'' என்றார் சுபா.

● ● ●

நடிகர் தேங்காய் சீனிவாசனை எஸ்.பி.டி. பிலிம்ஸார் தங்களது புதிய படத்தில் நடிக்க ஒப்பந்தம் செய்ய வந்தார்கள். 'படப்பிடிப்பு முழுவதும் அமெரிக்காவில்' என்று கூறியவுடன் தயங்கினார் தேங்காய். காரணம் கேட்டபோது. ''நான் இப்பொழுது தான் சிவாஜி புரொடக்ஷன்ஸ் படத்துக்காக அமெரிக்கா சென்று வந்தேன். திரும்பவும் அமெரிக்காவா!'' என்று அலுத்துக் கொண்டார். மேலும் இவர் தகப்பனாருக்கு உடல் நிலை சரியில்லாமல் இருந்தது. எனவே போக வேண்டாம் என்று முடிவு செய்து ''நீங்கள் கருணையைப் போட்டுக் கொள்ளுங்களேன்'' என்றார். அதற்குப் பஞ்சு அருணாசலம், ''நான் இதுவரை இருபத்தியாறு படங்களுக்கு எழுதியிருக்கிறேன். அதில் இருபத்தி ஐந்து படங்களில் நீங்கள் நடித்திருக்கிறீர்கள். என்னைப் பொறுத்தவரை நீங்கள் ராசியானவர். இந்தப் படத்தில் நீங்க ஒரு காட்சியாவது நடிக்கணும்'' என்றார்! சினிமாவும் சென்டிமெண்டும் உடன் பிறவாச் சகோதரர்களாயிற்றே!

● ● ●

வட இந்தியப் புகழ் பெற்ற தயாரிப்பாளர் பிரகாஷ் மெஹ்ரா புதுப் படம் எடுக்கிறார். அதற்கு 'மதர்லாண்டு' என்று பெயர் சூட்டத் தீர்மானித்துள்ளார். இப்படத்தில் அமிதா பச்சன், அம்ஜத்கான் ஆகியோர் நடிக்கிறார்கள். என்றாலும் பிரகாஷ் மெஹ்ராவுக்கு அவர்கள் போதவில்லை! மூன்றாவது முக்கிய பாகத்தில் குத்துச் சண்டை வீரர் முகம்மது அலியை நடிக்க வைக்க விரும்பினார். இதற்கான ஒப்புதலை அலியிடமிருந்து பெற அவரை அவரது அமெரிக்க இல்லத்தில் சந்தித்தார். அமிதாப் பச்சனும் உடன் சென்றிருந்தார்.

முகமது அலி தாம் பெண்களைக் கெடுப்பது போலவோ மது குடிப்பது போலவோ நடிக்க முடியாது என்று கூறினாராம். ஆனால் பிரகாஷின் படத்தில் ஒரு கற்பழிப்புக் காட்சியில்தான் முகம்மது அலியை வைத்து எடுக்க வேண்டி உள்ளதாம். நடக்கிற காரியமா?

● ● ●

அமிதாப் பச்சன் இப்பொழுது சிறந்த பாடகர்! மூன்று படங்களில் பாடியுள்ளார். 'அமர் அக்பர் அந்தோணி'யில் ஆரம்பித்து நட்வர்லால் வழியாக 'நசீப்' என்ற படம் வரை வந்திருக்கிறது. இன்னும் பல படங்களில் இவரைப் பாட அழைக்கிறார்கள்.

நமது தமிழகத்திலும் அதே கதைதான். முன்பெல்லாம் பாடத் தெரிந்தால்தான் நடிக்க முடியும். பின்னர் பின்னணிப் பாடகர்கள் தோன்றினர். இப்பொழுது பல நடிகர்கள் பாட ஆரம்பித்து விட்டார்கள். கமலஹாஸன் பாடியுள்ளார். மு. க. முத்துவும்தான். நடிகைகளில் பாரதி, ஜெயலலிதா

✕ திருப்பூர் மணி



✕ வெ. சேதுராமன்



குமாரி லலிதாசீதாராமன்



குமாரி பர்வதவர்த்தினிசீதாராமன்



# சினி மசாலா



※ கல்யாண ராமனில் ஒரு காட்சி



※ தேங்காய் சீனிவாசன்

சுமித்ரா ஆகியோர். இன்னும் ஒருவர்தான் பாக்கி. ரஜனிகாந்த்!

கமலஹாசன் நடித்த 'மன்மதலீலை' இந்தியில் 'டப்' செய்யப்பட்டு நன்றாக ஓடியதாம். அதன் விளைவு கமலஹாசன் முழுமையான ஒரு ஹிந்திப் படத்தில் நடிக்க இருக்கிறார். தயாரிப்பவர் தலைசிறந்த இயக்குனரும் தயாரிப்பாளருமான எல். வி. பிரசாத். இந்திப் படத்தை இயக்கப் போவது பாலசந்தர்தான்.

தேவர் திடீரென்று இறந்ததற்கான காரணம் என்ன தெரியுமா? என்று கேட்கிறார் சிவகுமாரின் நூறாவது படத்தை எடுத்த திருப்பூர் மணி. காரணத்தையும் அவரே சொல்கிறார். சினிமா தயாரிப்பவர்கள் எல்லோருக்குமே டென்ஷன் அதிகம். இருபத்தி நாலு மணி நேரமும் டென்ஷன், டென்ஷன், டென்ஷன்தான். சான்டோ என்று பெயர் பெற்ற தேவரே இப்படி குறைந்த ஆயுளில் திடீர் மரணம் அடைய வேண்டுமென்றால் நாங்கள் எல்லாம் எம்மாத்திரம்?

"கல்யாண ராமன் சுத்தமான காப்பி சார். சமீபத்தில் வந்த Dona Flora and her two Husbands என்ற படத்தின் தமிழ் வடிவம்தான்'' என்று பலர் கூறுவர். ஆனால் ''அதற்கு முன்பே வெளி வந்த ''இது நிஜமா?'' படத்தின் கதைதான் கல்யாண ராமன் கதை'' என்கிறார் சீதாராமன். ''இது நிஜமாவுக்கு நான்தான் வசனம் எழுதினேன். இந்தப் படம் 1940ம் வருடம் வாக்கில் வெளி வந்தது. இது நிஜமா கதையே அதற்கு முன்பு வந்த ஆங்கிலப் படமான Wonder baloon என்ற படத்தி



※ அமி

லிருந்து காப்பி அடிக்கப்பட்டதுதான்! இது நிஜமாவைப் பார்த்து, தெலுங்கில் படம் எடுத்தார்கள். அதுவே தமிழில் இப்போது கல்யாண ராமனாக வந்திருக்கிறது'' என்று கல்யாண ராமன் சரித்திரத்தை அவிழ்த்து விட்டார் சீதாராமன். அந்தக் காலத்தில் புகழ் பெற்ற கதை வசனகர்த்தாவாக விளங்கிய சீதாராமனுக்கு இப்பொழுது இரண்டு கண்களும் தெரியாது. தமது மகள்களான குமாரி லலிதா, குமாரி பர்வதவர்த்தினி ஆகியோர் உதவியுடன் நான் படம் பார்த்து வருகிறார். ''பார்வை இல்லை என்றாலும் எனக்குக் காது நன்றாகக் கேட்கிறதே'' என்று கூறுகிறார். பஞ்சு அருணாசலத்தின் பதில் என்னவோ? இதே போல் 'கோல்மால்' படம் பற்றியும் ஒரு சரித்திரம் கூறப்படுகிறது, திரை உலக வட்டாரத்தில்.

※ முகமது அலி








எங்களிடையே ஏற்பட்டுள்ள உடன்பாடு நாடாளுமன்றத் தேர்தலுக்கு மட்டுமல்ல; சட்டசபைத் தேர்தலுக்கும் உண்டு — கருணாநிதி





கல்கி
1979 அக்டோபர் 28
சித்தார்த்தி ஐப்பசி 11
மலர்: 38 இதழ்: 13



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# சிறு நாடு சிறந்தோங்கட்டும்!

"இலங்கை இராசதுரை" என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் கல்கியில் வெளியானதும் ஈழத் தமிழர்களிடமிருந்து நமக்குப் பல கடிதங்கள் வந்துள்ளன. அக்கடிதங்கள் தமது தலையங்கம் தவறானது என்றும் இலங்கைத் தமிழர் படும் அவதி ஜெயவர்த்தன ஆட்சியிலும் குறையவில்லை என்றும் எடுத்துக் காட்டுகின்றன. திருமதி பண்டார நாயகா ஆட்சியில் நடந்தது போலவே இந்த ஆட்சியிலும் தமிழர்களுக்குக் கொடுமைகள் விளைவிக்கப்படுவதாகக் கூறுகின்றன. இவ்வாறு பல கடிதங்கள் வந்திருப்பதே, இப்படிப் பல கடிதங்களை ஈழத் தமிழர்கள் எழுதுவது சாத்தியமாகி இருப்பதே ஒரு பெரிய முன்னேற்றம் என்று கருதுகிறோம். மாற்றுக் கருத்துக்களைத் துணிந்து வெளியிட முடிவதே ஓர் ஆரோக்கியமான மாறுதல் என்று எண்ணுகிறோம்.

ஜெயவர்த்தன ஆட்சிக்கு ஈழத் தமிழர்கள் அனைவரது பூரண ஆதரவு இருப்பதாக நாம் என்றைக்குமே கருதவில்லை. ஈழத் தமிழர் பிரச்னைகள் அவ்வளவையும் ஜெயவர்த்தன தீர்த்து வைத்து விட்டார் என்பதாகவும் நாம் சொல்லவில்லை. அவ்வாறு ஜெயவர்த்தனவே கருத மாட்டார். 'பிரச்னைகளுக்குத் தீர்வு காண முயல்வோம்; ஒத்துழையுங்கள்' என்றுதான் கோருகிறார்.

ஆனால் திருமதி பண்டார நாயகா ஆட்சியின் மனப் போக்குக்கும் இன்றைய ஆட்சியின் மனப் போக்குக்கும் நிரம்ப வித்தியாசம் இருப்பதை யாராலும் மறுக்க முடியாது. இத்தகைய ஒரு வரவேற்கத் தக்க மாறுதல் இல்லையெனில் ஜெயவர்த்தனவுக்குத் தொண்டைமான் இராசதுரை போன்றோரின் நல்லாதரவு கிடைத்திருக்குமா என்ன?

ஜெயவர்த்தனவின் ஐக்கிய தேசியக் கட்சி, தேர்தலுக்கு முன்பாக, அக்கட்சி பதவிக்கு வந்தால் தமிழ் பேசும் மக்களின் பிரச்னைகளைக் கவனிப்பதாகக் கூறியது. கல்வி, காலனி அமைத்தல், தமிழ் மொழியைப் பயன்படுத்துதல், அரசு நிறுவனங்களில் வேலை வாய்ப்பு போன்ற துறைகளில் ஈழத் தமிழர்களுக்கு உள்ள குறைகளைக் கவனித்துச் சீர்ப்படுத்துவதாக வாக்களித்தது. கொடுத்த வாக்கை மறவாமல் பல ஆரோக்கியமான மாற்றங்களை அக்கட்சி பதவிக்கு வந்த பின் செய்து வருகிறது. புதிய அரசியல் சாசன ரீதியாகவே பல நியாயங்கள் ஈழத் தமிழர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. ஆட்சி மொழி சிங்களமெனினும் சிங்களத்துடன் தமிழையும் தேசிய மொழியாக்கி அதற்குச் சம அந்தஸ்து தரப்பட்டுள்ளது. சிங்களத்துடன் தமிழும் ஆட்சியிலும், கல்வியிலும், நீதிமன்றங்களிலும் பயன்படுத்தப்படும் என்று அரசியல் சாசனம் உறுதி அளிக்கிறது.

ஈழத் தமிழர்களுக்கு இன்னமும் குறைகள் இல்லாமல் போகவில்லை. பல இன்னல்களை அவர்கள் சந்திக்க நேரலாம். ஜெயவர்த்தனவின் நல்லெண்ணத்தையும் புதிய அரசியல் சாசனத்தையும் சரியாகப் புரிந்துகொள்ளாத பல சிங்கள அதிகாரிகளின் கொடுமைகளுக்கு ஈழத் தமிழர்கள் ஆளாக நேரலாம். ஆனால் அரசியல் சாசன ரீதியாகவும் அதைவிட முக்கியமாக ஆட்சியாளரின் மனப் போக்கு ரீதியாகவும் நியாயம் வழங்கப்பட வாய்ப்புக்கள் இருக்கும்போது பிரச்னைகளைப் பேச்சு வார்த்தைகள் மூலமும் வற்புறுத்தல் மூலமும் அமைதியான எதிர்ப்பைக் காட்டுவதன் மூலமும் தீர்த்துக் கொள்ள முயல்வதே சிலாக்கியமானது. இதை விடுத்துப் பிரிவினை இயக்கத்தில் ஈடுபடுவதோ தனி ஈழநாடு கோருவதோ இதற்கென வன்முறைகளில் இறங்குவதோ புத்திசாலித்தனமாகாது.

"ஸ்ரீலங்கா பிளவுபடாமல் அதன் ஒருமைப்பாட்டினை நிலைநாட்டி, மதம், இனம், கொள்கை போன்ற எந்த விதப் பாகுபாடும் இன்றி, அனைத்து மக்களின்

நல்வாழ்வுக்கும் பாடுபட இந்த அரசுடன் ஒத்துழைக்குமாறு எல்லா மக்களையும் வேண்டுகிறேன்'' என்ற ஜெயவர்த்தனாவின் ஜூலை மூன்றாம் தேதி பேச்சு அவருடைய நல்லெண்ணத்தைக் காட்டுவதாகவே கருதுகிறோம். இந்த நல்வாய்ப்பினை ஈழத் தமிழர்கள் நழுவ விடக் கூடாது என்றும் எண்ணுகிறோம்.

ஈழத் தமிழர் பிரச்னை ஒருபுறமிருக்க இலங்கைப் பொருளாதாரம் எப்படி முன்னேறி வருகிறது என்பதை செப்டம்பர் 17ம் தேதி நியூஸ் வீக் பத்திரிகை சிலாகித்து எழுதியுள்ளது. தாராள மனப்பான்மையுடன் கூடிய புதிய சட்டங்கள் காரணமாக அயல் நாட்டு வர்த்தகர்களின் முதலீடு ஸ்ரீலங்காவில் அதிகரித்திருக்கிறது. முன்பு ஆண்டொன்றுக்கு இரண்டு சதம் மட்டுமே உயர்ந்து வந்த பொருளாதாரம் ஜெயவர்த்தனா ஆட்சியில் ஆண்டொன்றுக்கு எட்டு சத விகிதத்துக்கும் அதிகமாக வளர்ச்சி பெற்று வருகிறது. இரண்டு லட்சம் மக்களுக்குப் புதிதாக வேலைவாய்ப்புக்கள் கிடைத்துள்ளன. பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடா விட்டாலும் எதிர்காலம் குறித்து உற்சாகமான, நன்நம்பிக்கைச் சூழ்நிலை நிலவுகிறது.

இந்தியாவின் அரசியல் சாசனம் பற்றி பம்பாய் பல்கலைக் கழகக் கூட்டம் ஒன்றில் விமர்சிக்கப் புகுந்த பால்கிவாலா, எடுத்த எடுப்பிலேயே, ''பாரதத்தின் அரசியல் சாசனத்தைக் காட்டிலும் ஜயவர்த்தனாவின் ஸ்ரீலங்கா அரசியல் சாசனம் ஆரோக்கியமானது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்'' என்று பாராட்டியுள்ளார்.

நமது அண்டை நாடான ஈழத்தில் மொழி மத, இன வேற்றுமைகள் எல்லாம் நீங்கி நல்லெண்ணத்துடன் கூடிய சக வாழ்வு சகஜமாகி, சின்னஞ் சிறு நாடானாலும் சீரும் சிறப்பும் மிக்க நாடாகத் திகழ வேண்டும் என்பதே நம் பிரார்த்தனை.

---



# வீரமும் ஈரமும்

(The wild Geese)

ஆப்பிரிக்காவில் காலனி ஆதிக்கம் முடிந்து புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடுகள் பல புது விதமான உள்நாட்டுச் சர்வாதிகாரிகளைப் பெறுகின்றன. எனவே மக்களின் சுதந்திரம் என்பது பகல் கனவாகவே இருந்து வருகிறது. உண்மைச் சுதந்திரத்துக்காக வாதாடும் தலைவர்கள் பட வேண்டிய அவதி கொஞ்ச நஞ்சமல்ல. இது ஒரு பக்கம்.

ஆப்பிரிக்காவிலே உள்ள வெள்ளையர்கள் தாம் வளர்த்துக் கொண்ட நிற பேதம் காரணமாக நீக்ரோ கறுப்பர்களிடம் காட்டும் வெறுப்பு இன்னொரு பக்கம்.

ஆப்பிரிக்காவில் காலனி ஆதிக்கம் ஒழிந்தாலும், அங்குள்ள வளம் மிக்க சுரங்கங்களில் கனிப் பொருள்களை அகழ்ந்தெடுக்கும் நீண்ட கால உரிமை பெற ஆசைப்பட்டு, புதிய அரசுகளுடன் லண்டனில் உள்ள பெரிய தொழில் அதிபர்கள் நடத்தும் அநாகரிக பேரங்கள், அரக்கத்தன்மையான சூழ்ச்சிகள் — இவை மற்றொரு பக்கம்.

உலகப் போரில் ஈடுபட்டுச் சாகசச் செயல்கள் பல புரிந்து இப்போது ஓய்வு பெற்றுள்ள நிலையில் அந்த நாளும் வந்திடாதோ என்பது போல் பரபரப்பான வாழ்க்கைக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும் வயதான வீரர்கள் — மேலும் ஒரு பக்கம்.

இந்த நான்கு அம்சங்களையும் இணைத்து ஒரு கதை புனைய முடியுமா? என்று கேட்டால் முடியும் என்று காட்டி, அதை ஆங்கிலத்தில் முன்னணி நட்சத்திரங்கள் நடிக்கும் உன்னதமான ஒரு திரைப்படமாகவும் தயாரித்து விட்டிருக்கின்றனர். பெயர்: **THE WILD GEESE**

படத்தில் வன்முறைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ள போதே 'மனித இனம் அன்பினால் பிணைக்கப்படாமல் இப்படி ஒருவரை யொருவர் கொன்று மடிய வேண்டுமா?' என்ற கேள்வியும் வெளிப்படையாக அன்றி நயமாக எழுப்பப்படுகிறது.

இடைவேளைக்கு முன் பணத்துக்காகப் பதுங்கிச் சென்று படுகொலை செய்கிறவர்கள், தங்களை ஏவியவனாலேயே ஏமாற்றப்பட்டுப் பின் பாதியில் சொல்லொணாத் துன்பத்துக்கு உள்ளாகி உண்மை வீரத்தை மட்டுமின்றி மனிதாபிமானத்தையும் வெளிக் காட்ட வேண்டியவர்களாகிறார்கள். பணத்தினால் என்றுமே எல்லாவற்றையும் விலைக்கு வாங்கி விட முடியாது என்பதையும் அன்புதான் உலகில் நிலையான ஒன்று என்பதையும் இறுதிக் காட்சிகள் உணர்த்துகின்றன.

நெஞ்சிலே வீரத்தையும் ஈரத்தையும் ஒருங்கே வளர்க்கும் உயர்ந்த படம்.

— குட்டி கிருஷ்ணன்



# உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை




அருள்வாக்கு

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

**நா**ன் 'பாலிடிக்ஸ்' பேசக் கூடாதுதான். ஆனால் 'பாலிடிக்ஸ்' தர்மத்திலே வந்து முட்டி மோதி, நம் ஜனங்களுடைய நல்ல பண்புகளையெல்லாம் அடித்துக் கொண்டு போகிற மாதிரி ஏற்படும் போது, தர்ம பீடங்களாகவே மடங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கிறதனால், எப்படி வாயை மூடிக் கொண்டிருப்பது?

அடைத்து வைத்த ஜலம், திறந்து விட்டவுடன், ஒரே வேகமாகப் பிய்த்துக்கொண்டு கிளம்புவது போல், வெகு கால வெள்ளைக்கார ஆட்சிக்குப் பின் இப்போது ஸ்வதந்திரம் என்று ஏற்பட்டிருக்கும்போது எல்லாரும் நிதானமில்லாமல், கட்டுப்பாடு இல்லாமல், வியவஸ்தை இல்லாமல் கிளம்புவதற்கு ஆஸ்பதம் ஏற்பட்டிருக்கிறது. இம்மாதிரி சமயத்தில் அபேட்சகருக்கும் யோக்யதாம்சம் வேண்டாம், வோட்டுப் போடுகிறவனுக்கும் வேண்டாம் என்று பண்ணினால், நாம் மனஸால் கல்பனை கூடச் செய்து பார்க்க முடியாதபடி கட்சிப் பிரதி கட்சிகளும், லஞ்சமும், த்வேஷமும், மோசமும், பொய்யும்தான் 'எலெக்ஷன்' என்ற பெயரில் ஊரை இரண்டு படுத்தப் போகிறது என்றே எனக்குத் தோன்றுகிறது. சொத்து, படிப்பு முதலான யோக்கியதாம்சம் இல்லாவிட்டாலும் இவை எல்லாவற்றுக்கும் மேலான ஆத்ம சுத்தி உள்ளவர்கள் கூட இப்போதுள்ள ஏற்பாட்டின் கீழ் அபேக்ஷகர்களாகவும், வோட்டர்களாகவும் ஆகிறபோது அசுத்தமான அர்த்தத்தால் கெட்டுப்போய்த் தங்களுடைய ஆத்ம சுத்தத்தை இழக்கும்படி ஆகுமோ என்பதுதான் என் கவலை.

சோழ சாஸனத்தின் ஆறாவது, ஏழாவது clauseகளும் குறிப்பாக இந்த அர்த்த — ஆத்ம சுத்திகளை ரக்ஷிப்பதைத்தான் கருத்தில் கொண்டவை. **இப்போது** சுத்தமானவர்களை எலெக்ட் பண்ணிவிட்டால் மட்டும் போதாது; வெறுமே ஐடியலிஸம் பேசாமல், இந்த சுத்தர்களும் ஸந்தர்ப்ப நெரிசலில் **இனிமேல்** அசுத்தர்களாகி விடக் கூடிய ஹேதுக்களைக் கவனித்து, அவற்றை இல்லாமல் செய்துவிட வேண்டும் என்றே இந்த இரண்டு ஷரத்துக்கள் இருக்கின்றன.

இதில் ஒன்று மூன்று வருஷத்துக்கு மேல் ஒருத்தன் மெம்பராக இருக்கக் கூடாது என்கிறது. அந்தக் காலத்தில் இந்த ஊர்ச் சபைகளில் வருஷத்துக்கு ஒரு முறை தேர்தல் நடந்தது. இம்மாதிரி மூன்று தேர்தலில் தொடர்ந்து ஜயித்தவன் நாலாம் வருஷம் தேர்ந்தெடுக்கப்படக் கூடாது. ஏன்? பல வருஷங்கள் பதவி வகித்தால் ஒருத்தன் செல்வாக்கு மிதமிஞ்சிப் போகும். தனக்கு ஆதாயமான விதங்களில் காரியங்கள் செய்வது, வேண்டியவர்களுக்குச் சலுகை காட்டுவது, வேண்டாதவர்களை ஹிம்சிப்பது என்றெல்லாம் ஏற்பட்டுவிடும். அவ்வப்போது பிரதிநிதிகளை மாற்றி மாற்றி, புது ரத்தம் பிடிக்கும்படி செய்ய வேண்டும் என்ற அபிப்பிராயத்துக்கும் இங்கே மதிப்புத் தரப்படுகிறது. கடைசி ஷரத்தும் தர்ம நியாயமான நிர்வாகத்துக்கு முதுகெலும்பு மாதிரியாகும். முன்பு மெம்பராக இருந்தவர்களின் நெருங்கிய பந்துக்கள் புதிதாக மெம்பரானால், அவர்கள் செய்துவிட்டுப் போன தப்புக்களை இவர்கள் மூடி மழுப்பிவிடுவார்கள்; பிற்காலத்தில் வரப் போகிற தங்கள் உறவினர்களுக்கு ஆதாயமான திட்டங்களைக் கொண்டு வருவார்கள். உச்ச லெவலில் மானார்க்கி (முடியரசு)யும், பாரம்பரிய வாரிசுரிமையும் இருந்தாலும் அது அநேக விதமான மந்திராலோசனை ஸபைகளுக்குக் கட்டுப்பட்டே நடந்தது. கீழ் லெவலில் கிராம ஆட்சியில் இப்படிக் கூடவே கூடாது, அப்பா — பிள்ளை என்று மட்டுமில்லாமல், மற்ற கிட்டத்து உறவுக்காரர்கள் கூட மெம்பர்களாகக் கூடாது என்று விதி ஏற்பட்டிருக்கிறது. நீண்ட காலம் அடிமைப்பட்டும், தரித்திரப்பட்டும் இருந்துவிட்ட நம் தேசத்தில், புதிதாக அதிகாரம் வருகிறபோது, கண்டது காணாத மாதிரிப் பிடுங்கித் தின்ன வேண்டும் என்பதில் ஏற்படும் வேகத்தில், பழைய ராஜாக்கள், ஜமீன்தார்கள் எடுபட்டுப் போனாலும், புதிசாக அவரவரும் தங்கள் தங்கள் பந்துக்களோடு ''ஜமீன்தாரி''கள் உண்டாக்கிக் கொள்ளாமலிருக்க, இந்த மாதிரி இப்போதும் ஏதாவது ஷரத்து இருந்தால் தேவலை என்று நினைப்பவர்கள் சிலர் இருக்கலாம். (தொடரும்)

# இளமை எத்தனங்கள்

## இந்திரா சௌந்தரராஜன்



செங்கல்பட்டிலிருந்து காஞ்சிபுரம் நோக்கி ஓடிக் கொண்டிருக்கும் பல்லவன் பஸ்ஸினுள் மனித வர்க்கத்து மூச்சு விடும் சத்தத்தைத் தவிர வேறு எந்த விதமான பேச்சுக்களோ முணுமுணுப்புக்களோ இல்லை.

எதிர்சாரியில் அமர்ந்திருக்கும் இளம் பெண் ஒருத்தியின் மேல் பார்வையை வைத்து விட்டு அலையோடிக் கொண்டிருந்தான் பாஸ்கரன். அவனுக்குப் பக்கமாக அமர்ந்திருந்த சுகுமாருக்குப் பாஸ்கரின் நிலை தர்மசங்கடத்தைத் தந்து கொண்டிருந்தது. அதற்கான முக விகசிப்புக்களுடன் அவன் கூட அந்தப் பெண்ணைப் பார்க்கிறான். — அந்தப் பெண்ணுக்குப் பக்கமாகப் படு நெருக்கமாகப் பெரியவர் ஒருவர் அமர்ந்து கொண்டிருந்தார். அவர் — பாஸ்கரனும் சுகுமாரும் அந்தப் பெண்ணை விழுங்கி விடுவதைப் போல் பார்ப்பதைக் கண்டு — தவித்துக் கொண்டிருந்தார்! அந்தத் தவிப்போடு பாஸ்கரனின் ரசனைக்குப் பாத்திரமான அவளது உடம்பைச் சுட்டு விடுவது போல் பார்த்தார் அவர்.

ஷாம்பு போட்டதால் மினுமினுப்போடு காற்றுடன் அளாவி விளையாடும் கூந்தல்! வெள்ளை வெளேரென்ற சுவரில் பளிச்சென்று தெரியும் கருப்பைப் போல் நெற்றியில் சிறிதாக வட்டப் பொட்டு!

மதர்ப்பூட்டும் கன்னிமையின் வளர்ச்சியை நெருக்கித் தூக்கிக் கம்பீரமாகக் காட்சிக்கு வைக்கும் கருநிற பிளவுஸ்! வீக்கமும் பள்ளமும் இல்லாத தளதள உடல்வாகு! — அந்தப் பெரியவரே ஒரு கணம் இறக்கத்துக்கு ஆளானார்! — பார்வையை வெறுமை நிரம்பிய இடையின் மீதும் மாராப்பின் மேலும் வைத்துவிட்டு அலை மோதும் அவரை பாஸ்கரன் ஒரு விநாடி கூடப் பார்க்கவில்லை. பார்க்கக் கூடிய முகமா அது?

கன்னங் கறுக்கச் சொட்டைத் தலையும் விளக்கெண்ணெய் வடியும் மூஞ்சியுமாய்.

பாஸ்கரனுடன் புறப்பட்டு விட்டாலே இப்படித்தான் என்பது போல் சுகுமார் வருத்தம் சொரியக் கண்டிக்கும் தோரணையில் பாஸ்கரனைப் பார்த்தான். சுகுமாரின் பார்வையைப் பாஸ்கரன் லட்சியமே செய்யவில்லை! தொடர்ந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவள் ஜன்னலுக்கு அப்பால் பயிர் பச்சைகளின் மேலிருந்த பார்வையைத் திருப்பிப் பாஸ்கரனைப் பார்க்கிறாள். நீண்ட அளவான இருதாவும், அரும்புக்கணக்காய் இல்லாமல் கம்பளிப் புழு மொத்தத்தில் கம்பீரமான நாசித் துவாரத்தின் கீழ் கறுக்க வளர்ந்திருக்கும் மீசையும் அவளுக்குப் பிடித்தவை போலும்! எப்பொழுது பார்த்தாலும் அவள் அதையே பார்க்கிறாள்.

இயற்கையின் அழகை ரசித்தால் அது ரசனை, இயற்கையையொத்த பெண்ணை ரசித்தால் அது காமமா?

ஒரு காலத்தில் சுகுமார் தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டவை; இது நியாயமல்ல என்று அவனுக்குள் அவனே தீர்மானித்தவை.

பாஸ்கரனுடன் பழக ஆரம்பித்த பிறகே அவன் தனக்குள் தனக்கான சுதந்திரத்தை உபயோகிக்கத் தவறிவிட்டது தெரிய வந்தது!

''சுவர் பிடிக்கலையா ராஜா? நீ ஆம்பளை தானா?'' — ஒரு நாள் பாஸ்கர் சுகுமாரை இப்படிக் கேட்டு விட்டான்.

''பெண்ணை ரசிக்கத் தெரிந்தவன்தான் ஆம்பளையா?'' சுகு திருப்பிக் கேட்டான்.

''பின்னே?''

''போடா ஃபூல் உனக்குன்னு ஒருத்தி வருவா. ஏகாந்தமா உக்காந்து ரசி... ஊர்லே இருக்கறதுகளை ரசிக்க நீ யாருடா? உனக்குச் சொந்தமானவளைப் பிறர் ரசிக்க விடுவியா?'' அழுத்தமாகவே திருப்பிக் கேட்டான் சுகுமார். பதில் பேசாமல் பாஸ்கரன் சிரித்தான்.

''சரியான சுணக்குடா நீ. என் கூடப் பழகி இதைக் கூடவா நீ புரிஞ்சுக்கலே? எல்லாரையும் ரசிக்க முடியுமாடா? கழுத்திலே தாலியோட ஒருத்தி அழகா இருந்து அவளை நான் ஏறெடுத்துப் பார்த்து அதை நீ நானது வரையில் பார்த்திருக்கியா? — பிறர் தங்களை ரசிக்கணும்னே வர்றவங்

களைத்தான் ரசிக்க முடியும்! அவங்களை ரசிக்கிறதுல என்ன தப்பு?'' — அவன் அன்றைக்குச் சொன்னதை அவனால் அப்போது புரிந்து கொள்ள முடியவில்லை. இன்று முடிகிறது. எதிரே அமர்ந்திருக்கும் அவள் பிறர் ரசிக்க வேண்டும் என்றே தன்னை அலங்கரித்துக் கொண்டு பிறர் பார்த்து மயங்க வேண்டும் என்றே தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டு விபசாரக் கொள்கையை ஏற்றுக் கொண்டவளாகவே காட்சி தந்தாள்!

மெலிதான அந்தப் புடவை பஸ் குலுங்கி வளையும்போது நழுவுகிறது. வயதான அந்தப் பெரியவர் அவள் தோளை இடிக்கிறார். அவள் நிதானமாகச் சரி செய்து கொள்கிறாள். அவளுடைய நிதானத்தில் ஒருவித சோர்வு தென்படுகிறது. 'அது என்னவாக இருக்கும்?'

**கா**ஞ்சிபுரம் காந்தி ரோட்டில் அவர்கள் இறங்கியபொழுது அவளும் அந்த வயதானவரும் கூட உடன் இறங்கினார்கள். பாஸ்கரனுக்குள் உற்சாகம் கொடி கட்டிப் பறந்தது. லாட்ஜில் ரூம் எடுத்துப் பொருள்களை வைத்துவிட்டு முகம் கழுவ வாஷ் பேசினை நெருங்குகையில் டவலுடன் அவள் அறிமுகமானாள்.

'இங்கேயுமா?' — அவனுள் வியப்புக் குமிழிகள். அவன் இலேசாகச் சிரித்தான். பாஸ்கரனுக்கு ஐஸ் கட்டியில் விழுந்ததைப் போல் இருந்தது. அவனை முறைத்துப் பார்த்துக்கொண்டே அறைக்குத் திரும்பினான். திரும்பியதும் சுகுமாரிடம் அவளைக் கண்டதையும், அவள் புன்னகைத்ததையும் கூறினான். அவன் கால்கள் பூமியில் பாவாமல் அந்தரத்தில் தவழத் துடித்துக்கொண்டிருந்தன.

''பாஸ்கர்! உன் போக்குத் துளியும் சரியில்லை. வந்த வேலையைக் கவனி'' என்றான் சுகுமார். ''சரியான சாமியார்டா நீ'' என்றவன் மளமளவென்று ஒரு காகிதத்தை எடுத்து எதையோ எழுத ஆரம்பித்தான்.

**மா**லை சுமார் ஐந்து மணி இருக்கும்.

பாஸ்கரன் நிலைகொள்ளாது அறையினுள் அலைமோதிக் கொண்டிருக்கையில் பஸ்ஸினுள் இளம் பெண் பக்கமாக நெருக்கமாக அமர்ந்திருந்த பெரியவர் அறையினுள் எதிர்பாராத விதமாகப் பிரவேசித்தார். அவரது முகத்தில் எந்த விதமான சலனமும் இல்லை. பாஸ்கரன் பகல் பொழுதில் எழுதிய கடிதம் அவர் கைவசம் இருந்தது. அதைச் சுகுமாரின் முன் நீட்டினார். சுகுமார் படபடப்போடு அதை வாங்கிக் கொண்டான். பெரியவர் எதுவும் பேசாமல் அங்கிருந்து நகர்ந்தார். சுகுமார் வேகமாகக் கடிதத்தைப் படித்தான்.

'அழகே, உன் பெயர் என்னவென்று எனக்குத் தெரி





## விண்வெளி விஞ்ஞான வளர்ச்சி

செய்தித் தொடர்புக்கு உதவ விண்வெளியில் உலகைச்சுற்றி வரும் அமெரிக்கக் கோள்களில் ஏற்பட்டுள்ள வியத்தகு முன்னேற்றத்தைப் படம் சித்திரிக்கிறது. வலப்புறம் குட்டையாக உள்ள செய்தித் தொடர்புக்கான கோள் ஒரே சமயத்தில் ஐம்பது டெலிபோன்கால்களைக் கையாளும் திறனுடையதாக 1961ல் உருவாகப்பட்டது. இடது புறம் உயரமாக உள்ள புதிய கோளோ ஒரே சமயத்தில் 13,900 டெலிபோன் கால்களைக் கையாளும் ஆற்றல் படைத்தது! இது 1981ல் விண்வெளிக்கு அனுப்பப் படவிருக்கிறது. இருபதே ஆண்டுகளில் எத்தனை முன்னேற்றம்!

---

யாது...: உன்னை ஆராதிக்கத் துடிக்கிறேன்... உனக்குச் சம்மதமா?

அன்பன் பாஸ்கரன்'

என்று எழுதியிருந்தது. அவனுக்குள் கோபம் குமுழியிட்டது. பாஸ்கரனை முறைப்புடன் பார்த்தபோது அவனது பார்வை நிலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. கண்ணியத்துடன் ஆர்ப்பாட்டமில்லாமல் கடிதத்தைத் தந்துவிட்டு அகன்ற பெரியவரைச் சந்தித்து உடனடியாக மன்னிப்புக் கேட்க அவனது மனம் விரும்பியது. வேகமாய் அறையை விட்டு வெளியே வந்தபோது அவர் பெட்டி படுக்கையுடன் அந்த இளம் பெண்ணை அழைத்துக் கொண்டு வேறு இடம் நாடிப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

''ஐயா! நாங்க ஏதாவது தவறாக நடந்துக்கிட்டிருந்தா எங்களை மன்னிச்சுடுங்க... என் ஃபிரெண்ட் எப்பவுமே இப்படித்தான். கட்டுப்பாடு அவன் அளவுல குறைவு. ஆனால் நல்லவன். அவனைத் தயவுசெய்து தப்பா நெனைச்சுடாதீங்க....''

சுகுமாரின் பேச்சைக் கேட்டுவிட்டுப் பெரியவர் விரக்தியுடன் சிரித்தார். சிரிப்பைத் தொடர்ந்து விழிகளில் அக்கினித் தணலின் வெம்மை படியேறியது. விநாடிக்குள் சிரிப்பு மனத்தை உலுக்கப் பார்க்கும் கோபமாக உருமாறி விட்டது. அந்தக் கோபத்துடன் அவர் அந்தப் பெண்ணின் பக்கம் திரும்பியபொழுது அவள் அடைந்தாளமாட்டாமல் பிளவுஸுக்குள் மறைந்திருந்ததை வெளியே வரவிட்டாள். அது வரைக்கும் வெளித் தெரியாத மஞ்சள் கயிறு தாலிச் சரடாக உருக்கொண்டு வெளியுலகின் பார்வைக்குப் பளிச்சென்று தெரியும்படி கழுத்தை அலங்கரித்தது.

மின்னல் ஒன்று அவனைத் தாக்கினாற்போல் ஒரு கணம் அதிர்ந்து போனான் சுகுமார். பின்னாலேயே பாஸ்கரன் வந்து நின்று கொண்டிருந்தான். அவனால் அந்தப் பெண்ணை ஏறெடுத்தும் பார்க்க இயலாத அளவுக்கு விழியில் கூச்சம் புகுந்து கொண்டிருந்தது. பெரியவர் பேசினார்:

''தம்பி, உங்க வயசுக்குத் தக்கபடிதான் நீங்க நடந்துக்கிட்டிருக்கீங்க.... அப்படி நடந்துக்கிட்டது தப்புன்னு தெரிஞ்ச உடனேயே உங்க நல்ல உள்ளம் மன்னிப்புக் கேட்கத் தயாராயிடுச்சு! — தவறு உங்க பேரில இல்லை, எங்க பேர்லதான்....! இவ்வளவு சின்ன வயசுலே இவளைக் கட்டிக்கிட்டது என் தப்பு! தன் கணவன் வயசானவன்னு வெளியே தெரிஞ்சா தனக்கு அவமானம்னு நெனைச்சுத் தாலியை உடம்புக்குள்ளேயே பதுக்கி வெச்சது இவளோட தப்பு! இதை விடவா உங்க தப்பு பெரிசு?''

சுகுமார் மௌனமானான்.

---



புதுக் கணவன் புது மனைவியைக் கோபித்துக்கொண்டான்: ''என் நண்பர்கள் நாலு பேர் வந்திருக்கிறார்கள். இப்படி டிபன் தீர்ந்து விட்டது என்கிறாயே!''

''வழக்கமாக இரண்டு பேர்தான் வருவார்கள். இன்றைக்கு நாலு பேரைக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டார்கள்'' என்று குற்றம் சாட்டினாள் மனைவி.

''அதனாலென்ன, புத்தகம் பார்த்துத்தானே டிபன் செய்தாய்? இரண்டு பேருக்குப் பண்ணுவதைப் போல இரண்டு மடங்கு பண்ணினால் நான்கு பேருக்கு ஆகிவிடுமே!''

''அப்படித்தான் பண்ணினேன். இரண்டு மடங்கு அதிக நேரம் அடுப்பில் வைத்திருந்தேன். தப்பா?''

-சாமி

# கடல் ராணி

சாண்டில்யன்

## அத்தியாயம் 13

## மின்னல் நிகழ்ச்சிகள்

இந்திரஜித் அனந்த் தனது உத்தேசத்தைச் சொன்னதும் படகிலிருந்த மூவரும் பிரமிப்படைந்தார்கள் என்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. எப்பேர்ப்பட்ட தைரியசாலியாயிருந்தாலும், எப்பேர்ப்பட்ட திறமைசாலியாயிருந்தாலும், அந்தச் சமயத்தில் சொப்பனத்தில் கூட நினைக்க முடியாத உத்தேசத்தை அனந்த் வெளியிட்டான். "அடுத்து என்ன செய்வதாக உத்தேசம்?" என்று டெய்லர் கேட்ட கேள்விக்கு "இதில் என்ன சந்தேகம்? உன்னுடன் வரத்தான் உத்தேசம், காஸண்ட்ராவுக்குச் செல்லத்தான் உத்தேசம்" என்று அனந்த் பதில் சொன்னதும் ராணி அவனுக்கு ஒரு வேளை சித்தப் பிரமை இருக்குமோ என்று கூட நினைத்தாள். தன்னைப் பாடவைத்தன் காரணமாகச் சிந்து தூர்க்கத்திலிருந்து உதவியும் வந்து கொண்டிருந்த நிலையில், மிகுந்த சாமர்த்தியத்துடன் டெய்லரையும் வில்வரையும் செயலிழக்கச் செய்துவிட்ட நிலையில், தங்கள் கை ஓங்கி எதிரியின் கை தாழ்ந்து விட்ட தருணத்தில் இரு கொள்ளைக்காரர்களையும் படகைத் திருப்பச் சொல்லிச் சிந்து தூர்க்கம் அழைத்துச் செல்வது உசிதமாயிருக்க, காஸண்ட்ராவுக்குப் போக ஏன் துடிக்கிறான் அனந்த் என்பது ராணிக்கு விளங்கவில்லை.

சங்கீதத்தில் இளைத்துப் படகைத் துழாவுவதை நிறுத்திவிட்ட டெய்லர், தனது படகு அலைகளால் நன்றாகப் பின்னுக்குச் சென்று விட்டதையும், பின்னால் நன்றாகத் துழாவப்பட்டுத் துரிதமாக வரும் சிந்து தூர்க்கத்தின் படகுகள் வெகு சீக்கிரம் தனது படகைச் சூழ்ந்து கொள்ள முடியும் என்பதையும் நிர்ணயித்ததால் அனந்தின் தீர்மானம் அவனுக்கும் பெரு விசித்திரமாக இருந்தது.

நுண்ணிய அறிவுள்ள வில்வருக்கு மட்டும் இதில் ஏதோ சூது இருப்பதாகத் தோன்றியதால் அவன் கேட்டான் அனந்தை நோக்கி, "எதற்காக நீ காஸண்ட்ராவுக்கு வர ஆசைப்படுகிறாய்?" என்று.

அனந்தின் கண்கள் பகல் வேளைப் பூனைக் கண்களைப் போல் அரைவாசி மூடியே கிடந்தன. "ஆசை என்னுடையதல்ல. என்னைக் காஸண்ட்ராவுக்கு அழைத்துச் செல்ல ஆசைப்பட்டது டெய்லர்" என்றான்.

இம்முறை டெய்லர் ஆத்திரத்துடன் இடைமறித்து "இல்லை, இல்லை. நான் ராணியை மட்டும்தான் அழைத்துப் போக எண்ணினேன். நீதான் வலுக்கட்டாயமாக வந்தாய்" என்று கூறினான். அத்துடன் நிற்கவில்லை டெய்லர். "காஸண்ட்ராவில் உனக்கு மரணம் காத்திருக்கிறது என்று தெரிந்தும் எதற்காக வந்தாய் அனந்த்?" என்று விசாரிக்கவும் செய்தான் குழப்பத்துடன், துடுப்புக்களை மீண்டும் எடுத்து மெள்ளத் துழாவிக் கொண்டே.

"காரணம் இருந்தது" என்றான் அனந்த் கண்களை அகல விரிக்காமலே.

"என்ன காரணம்? ராணியைக் காப்பாற்றவா?" என்று டெய்லர் வினவினான்.

"இல்லை." அனந்தின் ஒற்றைச் சொல்லில் ஏளனம் ஒலித்தது.

"வேறு யாரைக் காப்பாற்றவோ?" என்று கேட்டான் டெய்லர் மீண்டும்.

"உன்னைக் காப்பாற்ற." அனந்த் இதைச் சர்வ சாதாரணமாகச் சொன்னான்.

டெய்லரின் பழுப்பு நிறப் புருவங்கள் மேலெழுந்தன கேள்வி கேட்பன போல். "என்னைக் காப்பாற்றவா?" என்ற சொற்கள் உதடுகளிலிருந்து உக்கிரத்துடன் உதிர்ந்தன.



### வண்ணத்தில் ஒரு வனிதை

**பின்னலில் ஒரு கரம் விளையாட**
**கன்னத்தில் ஒரு விரல் கோலமிட**
**எண்ணத்தில் ஓர் உருவம் நிழலாட**
**வண்ணத்தில் ஒரு வனிதை வாழ்க, வாழ்க!**

மேலட்டையில்: குமாரி அனிதா

வண்ணப்படம் எடுத்தவர்: சாய் குமாரி

''ஆம்.''

''எனக்கு யாரால் ஆபத்து? காஸண்ட்ராவில் இருப்பவர்கள் அனைவரும் என் மாலுமிகள். அதுவும் என்னைக் கண்டால் நடுங்கும் கொள்ளைக்காரர்கள்.''

''காஸண்ட்ராவை அடைந்தால்தானே அந்தப் பாதுகாப்பு?''

''காஸண்ட்ராவை அடைவதை என்னை யார் தடுக்க முடியும்?''

''வில்வர் தடுக்கலாம்...'' என்று அனந்த் சொன்னதும், ''டெய்லர் மை பாய்! ஹீ லைஸ், திஸ் ராஸ்கல் டெல் (டெய்லர் மகனே இந்த ராஸ்கல் பொய் சொல்கிறான்)'' என்று வில்வர் கூவினான்.

டெய்லரின் விழிகள் வில்வரைப் பயங்கரமாகப் பார்த்தன. அனந்தையும் திரும்பி நோக்கின. ''இதை நீ நம்பச் சொல்கிறாயா என்னை?'' என்றும் வினவினான்.

அனந்த் சற்று அகலமாகவே திறந்தான் கண்களை. ''நீ நம்பினாலும் சரி நம்பாவிட்டாலும் சரி. அனந்த் எப்பொழுதும் பொய் சொல்வதில்லை. இதை மகாராஷ்டிரம் அறியும்'' என்று கூறினான் புன்னகையுடன். மேலும் தொடர்ந்து, ''டெய்லர்! நீ இப்பொழுது உயிருடன் இருப்பதற்கு நான்தான் காரணம்'' என்றும் சொன்னான்.

டெய்லருக்கு ஏதும் புரியவில்லை. வில்வர் மட்டும் அனந்தின் மனப் போக்கைப் புரிந்து கொண்டதால் சிரமப்பட்டுப் படகில் அசைந்தான் சங்கடத்துடன். அனந்த் சொன்னான்: ''டெய்லர்! தென்னஞ் சோலையிலிருந்து எட்களை வரச் சொல்லி நீ முன் நடந்தாய்...''

''ஆம், நடந்தேன்''. டெய்லர் மனத்தில் ஏதோ சந்தேகம் முளைத்ததற்கு அவன் முகத்தில் அறிகுறி புலப்பட்டது.

''அப்பொழுது உன்னை முதுகில் குத்தும்படி வில்வர் சொன்னான். யாரையும் முதுகில் குத்தும் வழக்கம் இல்லையாகையால் மறுத்தேன். வேண்டுமானால் ராணியைக் கேட்டுப் பார்'' என்றான் அனந்த்.

''நான் இவனைக் குத்தச் சொல்லவில்லை. முழுப் பொய். நம்பாதே டெய்லர். நான் காப்டன் மக்ரேகையே உன்னிடமிருந்து காப்பாற்றவில்லையா?'' என்று மன்றாடினான் வில்வர். அவன் குரலில் குழைவு மண்டிக் கிடந்தது.

டெய்லரின் விழிகள் பயங்கரமாக விழித்தன வில்வரை நோக்கி. பிறகு அவற்றில் குழப்பமும் விளைந்தது.

''எதை நம்புவதென்று எனக்குப் புரியவில்லை'' என்று டெய்லர் சொன்னாலும் அவன் வில்வரை நம்பவில்லையென்பதையும், இரு கொள்ளைக்காரருக்குமிடையே தான் சந்தேகப் பேயைப் புகுத்தி விட்டதையும் அனந்த் சந்தேகமறப் புரிந்து கொண்டான்.

இந்தத் தர்க்கத்துக்கிடையில் பின்னால் வந்த படகுகள் டெய்லரின் படகைச் சூழ்ந்து கொள்ளவே தர்க்கம் நின்றது. முதல் படகில் வந்த நடுத்தர வயதுள்ள மனிதர் ஒருவர் படகிலிருந்து எழுந்து நின்று ''துப்பாக்கியைத் தொடும் யாரையும் மால்வான் கோட்டையில் தூக்கில் போட்டு விடுவேன்'' என்று மிரட்டியதன்றித் தமது பெரும் கைத் துப்பாக்கியையும் படகிலிருந்த இரு வெள்ளையரையும் நோக்கி நீட்டினார்.

டெய்லர் அவரை மிக அலட்சியமாகப் பார்த்தான். ''ஹூ த டெவில் ஆர் யூ? (யார் நீ)'' என்று கேட்ட அவன் குரலிலும் அலட்சியம் பலமாக ஒலித்தது.

''ராணியின் தந்தை! *சங்கர் பந்த்; மால்வான் பகுதியின் தளபதி'' என்று அறிமுகம் செய்து வைத்தான் இந்திரஜித்.

* Shankar Pant, Commander in Chief of Malavan siezed an English ship — Maharashtra State Gazetteer — Ratnagiri Dt. P. 775.



சங்கர் பந்தையும் நோக்கி அவர் அழைத்து வந்த பதினைந்து படகுகளி லிருந்த வீரர்களையும் நோக்கினான் டெய் லர். கடைசியில் அவன் கண்கள் சங்கர் பந்தின் மீது நிலைத்தன. ''எங்களை என்ன செய்ய உத்தேசம்?'' என்றான்.

சங்கர் பந்த் டெய்லருக்குப் பதில் சொல்ல வில்லை. அனந்தை நோக்கி ''நீ யார்?'' என்று விசாரித்தார்.

டெய்லரின் விழிகள் வியப்பைக் கக்கின. ''இவனை உங்களுக்குத் தெரியாதா?'' என்று வினவினான்.

''தெரிந்தால் ஏன் கேட்கிறேன்?'' என்றார் சங்கர் பந்த்.

இதுவரை வாளாவிருந்த ராணி குறுக்கிட்டு, ''இவர்தான் இந்திரஜித் அனந்த். ருத்ராஜி அனந்தின் சகோதரர்'' என்று அறிமுகம் செய்து வைத்தாள்.

இதைக் கேட்ட சங்கர் பந்தின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. ''இவன் எப்பொழுது வந்தான் இங்கே?'' என்று விசா ரித்த அவர் சொற்கள் துப்பாக்கி ரவைகள் போல் வெளி வந்தன.

''ஒன்றரை நாட்கள்தான் ஆகின்றன'' என்று அனந்தே பதில் சொன்னான் அவருக்கு.

''என்ன வேலையாக வந்தாய்?'' என்று விசாரித்தார் சங்கர் பந்த்.

''சிந்து துர்க்கத்தைப் பார்க்க வந்தேன்.''

''எதற்காக நீ சிந்து துர்க்கத்தைப் பார்க்க வேண்டும்?''

''சிவாஜி மகாராஜா கட்டிய கடற் கோட் டையை நீங்கள் எந்த ஒழுங்கில் வைத்திருக் கிறீர்கள் என்பதை அறிய.''

''நீ எதற்காக அறிய வேண்டும்?''

''அது என் அந்தரங்கம்.''



மனைவி: கண்ணு மண்ணு தெரியாம அடிக் காதீங்கன்னு சொன்னேனே கேட்டேளா?
கணவன்: ஏன் நம்ம பையனுக்கு நல்ல அடி பட்டு விட்டதா?
மனைவி: இல்லே. நீங்க இத்தனை நேரம் அடித் தது பக்கத்து வீட்டுப் பையனை!

—எஸ். சந்திரசேகர்

---

''உன் அந்தரங்கத்தைச் சிந்து துர்க்கத்தில் உடைக்கிறேன் வா'' என்று சீறிய சங்கர் பந்த் ''இந்தப் படகைத் திருப்புங்கள் கோட் டையை நோக்கி!'' என்று இரைந்தார் தம் முடன் வந்த படகு வீரர்களை நோக்கி.

பதினைந்து படகுகள் நெருங்கிய சமயத் தில் கடலலைகளில் எல்லாமே ஆடி நின்ற தருணத்தில் அனந்த் இரைந்து சொன்னான், ''நாம் சிந்து துர்க்கம் செல்லவில்லை'' என்று.

''அது உன் இஷ்டமல்ல'' என்றார் சங்கர் பந்த்.

அனந்தின் கைத் துப்பாக்கி சங்கரை நோக்கி விழித்தது. ''தளபதி! அனந்தை மீற யாருக்கும் அதிகாரம் கிடையாது'' என்று ஒரு கையிலிருந்த கைத்துப்பாக்கியை அவரை நோக்கி நீட்டிய அனந்த், ராணி அவன் துப்பாக்கியை எடுப்பதைப் பார்த் ததும் இன்னொரு துப்பாக்கியை இன்னொரு

கையில் எடுத்துக்கொண்டு அவனையும் வில் வரையும், டெய்லரையும் ஏக காலத்தில் அச்சுறுத்தும் வண்ணம் வளைத்து ''யாரும் அறிவீனமான செய்கையில் ஈடுபட வேண்டாம்'' என்று அதட்டினான். அத்துடன் ''டெய்லர்! துடுப்புக்களை எடுத்துத் துழாவு. படகு காஸண்ட்ராவை நோக்கிச் செல்லட்டும். மால்வான் தளபதி! உத்தரவிடுங்கள் உங்கள் படகுகளுக்கு, எங்களைப் பின்பற்றி வர. நாம் செய்ய வேண்டிய முடிவுகளை காஸண்ட்ராவில் செய்வோம்'' என்று மளமளவென உத்தரவுகளைப் பிறப்பித்தான் இந்திரஜித்.

அதற்குப் பிறகு அதிகப் பேச்சுக்கு இடமில்லாததால் அவன் உத்தரவுப்படி படகுகள் நகர்ந்தன மேற்கு நோக்கி. அரை ஜாமம் சென்றதும் எதிரே பெரிய கடல் ராட்சதன் போல் நின்றிருந்தது காஸண்ட்ரா. 'அதன் விளக்குகள் அதிகமாகப் பளிச்சிடவில்லையாதலாலும், மங்கலாக நான்கு விளக்குகளே எரிந்து கொண்டிருந்ததாலும் கடல் ராட்சதன் தன் விழிகளை லேசாக மூடி உறங்குவது போன்ற பிரமையை அளித்தது அந்த மாபெரும் போர்க்கப்பல். காஸண்ட்ராவின் மாலுமிகள் தளத்தில் உலாவிக் கொண்டிருந்ததால் தூரத்தே ஏதோ பிசாசுகள் உலாவுவதைப் போன்ற பயங்கரத்தை அளித்தது, கப்பலின் தோற்றமும் சூழ்நிலையும்.

இவற்றையெல்லாம் மற்றவர்களைப்போல் வில்வரும் கவனித்தான். அவன் மௌனமாகவே வந்தான் கடைசி வரை. அவன் கூரிய அறிவுக்குத் தன் திட்டம் ஓரளவுக்குப் புரிந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்த அனந்த் அவனைப் பார்த்துப் புன்முறுவல் காட்டினான்.

வில்வர் புன்முறுவல் செய்யவில்லை. தன் நிஜார் பாக்கெட்டிலிருந்த புட்டியை எடுத்து சிறிது ரம்மை அருந்தினான். அதை டெய்லரிடமும் நீட்டினான். டெய்லர் தன் தலையசைப்பினாலேயே அதை மறுத்து விடவே வில்வர் பின்னால் சாய்ந்து விட்டான் படகில். அவன் உறங்குவது போல் பாசாங்கு செய்தாலும் அவன் உணர்ச்சிகள் பெரிதும் விழித்திருப்பதை அனந்த் உணர்ந்துகொண்டதால் அவன் மீது ஒரு கண்ணை வைத்துக் கொண்டே படகில் பயணம் செய்தான்.

மெல்ல மெல்ல காஸண்ட்ராவும் அணுகியது. அப்பொழுதுதான் அந்தத் திடீர் நிகழ்ச்சி ஏற்பட்டது. சரேலென்று வீசப்பட்ட ஒரு தடியின் ஒலி! திடீரென்று சுடப்பட்ட துப்பாக்கியின் பயங்கர சத்தம், இரண்டும் கடலிலே ஒலித்தன ஒரே சமயத்தில். அவற்றில் இணைந்த ''ஹா!'' என்று எழுந்த அலறல் பயங்கரத்தை உச்ச நிலைக்குக் கொண்டு சென்றது. அடுத்து மின்னல் வேக நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. (தொடரும்



# வட்டமேஜை

## வண்ணங்களைக் குழைத்து எண்ணங்களைத் தீட்டி.....

● ''வண்ணங்களைக் குழைத்து
எண்ணங்களைத் தீட்டிய
கலை உள்ளங்களுக்கு — என்
கரம் கூப்பிய நன்றி!''
கிருஷ்ணகிரி ஆர். வி. யேஸ்.

● இவ்வார வானவில் சிறப்பிதழ் அற்புதமாய் ஜொலித்தது. எதைப் பாராட்டுவதென்றே தெரியவில்லை: கண்ணைக் கவர்ந்த அட்டைப் படத்தைப் பாராட்டுவதா? கருத்தைக் கவர்ந்த கதைகளைப் பாராட்டுவதா? எழுத்தாளர்கள் விரும்பிய ஓவியர்களின் புகைப்படத்தோடு கூடிய செய்திகளைப் பாராட்டுவதா? ஓவியர்களின் கைத்திறனைப் பாராட்டுவதா? ஒவ்வொரு கதை முகப்பிலும் இடம் பெற்றுள்ள கவிதைகளைப் பாராட்டுவதா? மொத்தத்தில் இவ்விதழ் செந்தேனாய் இனித்தது.
சேலம்
எஸ். அம்சவேணி
மணிசுந்தர்

● கடந்த சில இதழ்களாய் 'கல்கி' 'கமர்ஷியல்' பாதையில் போகிறதோ என்று சந்தேகப்பட்டுக் கொண்டு இருந்த எனக்கு வான வில் சிறப்பிதழ்' 'கல்கி' இலக்கியப் பாதையிலிருந்து விலகவில்லை என்று உணர்த்திற்று.
சென்னை-12 வி. சந்திரசேகரன்

● எட்டு எழுத்தாளர்களில் யாருமே ஓவியர் 'ஜெயராஜை'ச் சித்திரம் தீட்டச் சொல்லாதது என் போன்ற இளவட்டங்களுக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது.
கண்ணம்பாளையம் டி. ஜெயசிங்

● ஆறு மாதங்கள் கழித்து எடுத்துப் படித்துப் பாருங்கள்! என்ற 'கடுகு'வின் பதிலை ஒட்டி ஒன்று கூற விரும்புகிறேன். ஆறு மாதங்களல்ல; அறுபது ஆண்டுகள் கழித்து எடுத்துப் படித்தாலும் சரி; ஆர். சூடாமணியின் எழுத்துக்கள் சுடு கொடுத்து அன்று அலர்ந்த அக்கினி மலர்களாக ஜொலிக்கும். தலைப்பே தலைமுறைக்குத் தாங்கும். ''விமோசன வெள்ளை''.
திருப்பத்தூர் ஜீ. தனியன்

● சு. சமுத்திரம், கோபுலு அவர்களை 'கதாசிரியர்களுக்கு இவர் உரையாசிரியர்' என்பது எவ்வளவு பொருத்தம்!
புதுதில்லி-5 கே. ஆர். ஜெகந்நாதன்

● பாலகுமாரனின் கதை டாப்ஸ் ஆல்; முதலில் நவரசக் கதைகள், பிறகு வானவில் கதைகள். புதிய சிறுகதைகள் மேன்மேலும் பெருக, 'புதுமுக எழுத்தாளர்களின் சிறப்பிதழ்' வெளியிடுங்களேன்!
தஞ்சை த. ரா. நவநீதன்



**யோசனை ஏற்கப்பட்டது நன்றி. — ஆசிரியர்**

● நா. கா.வின் சிம்பிளான கவிது. புதுக் கவிதைப் புனல் அவர்.

துமிலன் தேவையே. கட்டுரைக்கு வந்த இதனைக் கதையாகப் பிரசுரித்து விட்டீர்கள் ''இன்று ஞாயிறு....'' அவன் அலுவலகத்தில் 'உவ்வா' சொல்லி விடுமுறை பெற்று வீட்டுக்கு வந்த நாள் ஞாயிறோ?
குடியாத்தம் நா. செந்தில் மீரா

**ஞாயிறு அன்று சில பாங்குகள் இயங்கவே செய்கின்றன. — ஆசிரியர்**

● ஓவியர் மாருதி 'ஆரஞ்சு வண்ணத்தைக் கண்ணீரில் குழைத்து' என்ற சிறுகதைக்கு வரைந்துள்ள படத்துக்கும் அவர் போட்டோவுக்கும் துளிகூட வித்தியாசம் இல்லையே!
திருநெல்வேலி அழகு

● வட்டமேஜை கண்டேன். பொற்கைப் பாண்டியன் பெயரும் குலசேகரன்; 16 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் அதர்மன் பெயரும் குலசேகரன்தான். இப்படித்தான் காலிப்பா விவகாரமும். கோவி எப்போதுமே சரித்திரப் பிழை செய்ய மாட்டான். சகோதரி தீபாவுக்கு இது புரிய வேண்டும். ஆதாரம்: இந்தியர் வரலாறு முதற் பாகம் — பேராசிரியர் எஸ். கே. கோவிந்தசாமி பிள்ளை. பக்கம் 255 காண்க.
சென்னை கோவி மணிசேகரன்

● பத்திரிகைகள் சிலருக்குத் தலையங்கம் எழுதிப் பாராட்டுகின்றன. சிலருக்குத் தலையங்கம் எழுதிப் பாராட்டுவதன் மூலம் பத்திரிகைகள் பெருமை அடைகின்றன. 'டாக்டர்' பட்டம் பெற்ற ம. பொ. சி.யைப் பாராட்டித் தலையங்கம் எழுதியதன் மூலம் கல்கி பெருமையுற்றது.
போளூர் செல்விப் பிரியன்

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

❀ ராஜ்மோகன் காந்தி ❀

**கா**ந்தியிடம் விரைந்தார் ஸி. ஆர். ''இதை ஒப்புக்கொள்வதைத் தவிர உங்களுக்கு வேறு வழி இல்லை என்ற எண்ணத்தில் நான் என்னுடைய சொந்தப் பொறுப்பில் இக்காரியத்தைச் செய்திருக்கிறேன்'' என்று கூறித் தமது ஏற்பாட்டை வெளியிட்டார். மகாத்மா கவனமாகக் கேட்டார். ஸி. ஆரை இன்னொரு முறையும் சொல்லச் சொல்லிச் செவிமடுத்தார். பிறகு தம் எண்ணத்தை ஒரே வார்த்தையில் வெளியிட்டார்: ''பிரமாதம்!''

ஸி. ஆர். குழுமியிருந்த தலைவர்களிடம் திரும்பிச் சென்றார். பின்னால் ''எரவாடா ஒப்பந்தம்'' என்று பிரசித்தி பெற்ற ஒப்பந்தமானது இப்போது துரிதமாகத் தயாரிக்கப்பட்டுக் கையெழுத்தாகியது.

அம்பேத்கார் தலைமையிலும் எம். ஸி. ராஜா தலைமையிலும் இயங்கிய தாழ்த்தப்பட்டோரின் இரு பிரிவினரும் ஒப்பந்தத்தை ஏற்றார்கள். ஜாதி ஹிந்துக்கள் சார்பில் மாளவியா ஒப்புதல் தந்தார். அவ்விடத்தில் இருந்த காங்கிரஸ்காரர்களும் குன்ஸ்ரு, சப்ரூ போன்ற லிபரல் கட்சித் தலைவர்களும் கையெழுத்திட்டனர். ஸி. ஆரும் அம்பேத்காரும் கையெழுத்தான பிறகு பேனாக்களை மாற்றிக் கொண்டனர்.

ஒப்பந்தத்தின் நகல் தந்தியாகவே ஒரு ஞாயிற்றுக் கிழமை லண்டனை வந்தடைந்தது. பிரதம மந்திரி ஸஸெக்ஸில் ஒரு ஈமச் சடங்கில் பங்கேற்கச் சென்றிருந்தார். 10, டௌனிங் தெருவுக்கு அவர் திரும்பிய பிறகு நள்ளிரவு வரை அயல் நாட்டுக் காரிய தரிசி ஹோருடன் கலந்தாலோசித்தார்.

இதற்கிடையில் எரவாடா லண்டனிலிருந்து செய்தி கிட்டக் காத்திருந்தது. பிரிட்டனில் இயங்கிய இந்தியா லீகைச் சேர்ந்த எல்லென் வில்கின்ஸன் ஒப்பந்தம் கையெழுத்தாகி பன்னிரண்டு மணி நேரத்துக்குப் பிறகு காந்தியைச் சந்திக்க எரவாடா சிறைக்கு வந்தார். மகாத்மா அருகே திரண்டிருந்தவர்களிடம் அவர் பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தைப் பற்றிக் கடுமையான விஷயங்களைக் கூறினார். ''சிவப்பு நாடா காரணமாக காந்தியின் உயிர்த் தியாகம் தவிர்க்க முடியாததாகி விடுமோ?'' என்று சிலர் கேட்டனர்.

இந்த அவநம்பிக்கையைச் சமாளிக்கும் முகமாக ஸி. ஆர். கூறினார்:

''நான் நல்ல விதமாகவே அவர்களைப் புரிந்து கொள்ள விரும்புகிறேன். அதாவது காந்தி தமது உண்ணா விரதத்தைக் கைவிடு முன்னர் அரசு இந்த ஒப்பந்தத்தை முழுமையாக ஏற்க வேண்டும் என்று வற்புறுத்துவாரேயானால் பிரிட்டிஷ் பிரதமர் தேவையான நடவடிக்கை எடுக்கச் சிறிதும் கால தாமதம் செய்ய விரும்ப மாட்டார்.''

ஸி. ஆர். சொன்னது சரியாகி விட்டது. பிரிட்டிஷ் மந்திரி சபை எரவாடா ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டு விட்டதாகத் திங்கட்கிழமைக் காலை வாய் வார்த்தையாகச் செய்தி கிடைத்தது. இருப்பினும் சிறைச்சாலைகளின் இன்ஸ்பெக்டர் - ஜெனரலான கர்னல் டாயில் காந்தியிடம் ஒப்பந்தத்தை அரசு ஏற்றதாகக் குறிப்பிடும் ஓர் அதிகாரபூர்வமான தாளைக் காண்பித்த பிறகுதான் அவர் உபவாசத்தை முறித்தார்.

சிறைச்சாலைக்குள்ளே மாமரத்தின் நிழலில் பட்டினி கிடக்கும் ஒருவர் மாபெரும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் தமது கருத்தை ஏற்கச் செய்வதில் வெற்றி கண்டுவிட்டார். இதை விட முக்கியம், தனது அன்புக்குரிய பிரதிநிதியின் உயிரைக் காக்க, ஹிந்து சமூகமானது தான் இந்நாள் வரை கடைப்பிடித்து வந்த அநீதியை இப்போதேனும் ஒப்புக்கொண்டு அதனை மாற்றவும் முயன்று கொண்டிருந்தது.



⌘ பண்டித மாளவியா

ஆசாரம் மிக்கவர்களும் தீண்டாதாரும் சேர்ந்து உணவருந்தினார்கள். பம்பாய் கோயில் ஒன்றில் வழிபடுபவர்கள், அதனைத் தீண்டாதாருக்கும் திறந்து விடுவது குறித்து வாக்கெடுப்பு நடத்தியதில் அறுநூறு பேர் ஆதரவாகவும் ஒரே ஒரு நபர் எதிர்த்தும் வோட்டளித்தனர். அக்டோபர் இரண்டாம் தேதிக்குள் தேசம் முழுவதும் நூறு கோயில்களுக்கு மேல் தீண்டாதாருக்குத் திறந்து விடப்பட்டு விட்டன. இந்தியா தீண்டாமை ஒழிப்பு வாரம் கொண்டாடியது. அக்டோபர் முதல் தேதி தீண்டாமை ஒழிப்புச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. தென்னகம்தான் ஆசாரக் கோட்டையாக விளங்கியது. நவம்பர் முதல் தேதியன்று சென்னை சட்டமன்ற மேல் சபை, கோயில்களை அனைவருக்கும் திறந்து விடச் சட்டம் கொண்டு வருமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது.

லண்டன் பத்திரிகையான எகானமிஸ்ட் ''ஹிந்து மதத்தின் பல நூற்றாண்டு சரித்திரத்தில் இந்த உபவாசம் போல் முக்கிய

மானதொரு நிகழ்ச்சி நடந்ததே இல்லை' என்று எழுதியது. ''நமது கண்ணெதிரே இந்த அற்புதம் நிகழ்ந்திருக்கிறது'' என்று தாகூர் சொன்னார்.

ஹிந்து மதப் பழக்க வழக்கங்கள் மட்டுமல்ல, இந்த உபவாசத்தால் அரசியலும் பாதிக்கப்பட்டிருந்தது. தேசத்தின் ஆன்மா சக்தி பெற்று எழுந்தது. துகள் துகளாக உடைந்து கொண்டிருந்த அடிமை இந்தியா, தன்னைச் சுதாரித்துக் கொண்டு, தனது எஜமானர்களை விட ஒரு படி மேலே தார்மீக பலம் பெற்று நின்றது.

உபவாசம் முடிந்ததும் ஸி. ஆருக்கு ஒரு பெரும் சுமை நீங்கியது போல் நிம்மதி பிறந்தது. நட்சத்திரக் கணக்குப்படி உபவாசம் முடிந்த மறுநாள் காந்தியின் பிறந்த தினம். ஸி. ஆர். அதனை ''மறுபிறவித் தினம்'' என்று வர்ணித்தார்.

சில வாரங்கள் கழித்து அவர் தமக்கிருந்து வந்த கவலைகள் குறித்து நினைவுபடுத்திக் கொண்டு கூறினார்: ''பொன் முட்டையிடும் வாத்தைக் கொல்லவே முடியாது என்பதை நினைவில் வைத்துக் கொள்வது ஸாக்ரமஸின் நண்பர்களுக்குச் சிரமமாக இருந்ததுபோலவே எனக்கும் கஷ்டமாகத்தான் இருந்தது. உடலைப் போய் வாத்து என நான் தவறாக எண்ணி விட்டேன்.''

அவர் மேலும் சொன்னார்:

''தீண்டாமை என்னும் மனிதத் தன்மையற்ற கொடுமை எவ்வளவு அக்கிரமமானது அந்த மூடப் பழக்கம் எப்படி விடாப் பிடியாக நம்மவரைப் பற்றிக் கொண்டிருக்கிறது என்பதைப் பார்க்குமிடத்தில் அதனை ஒழிப்பதற்குத் தரப்படும் விலையாக நம் அனைவரது பேரன்புக்கும் உரிய ஒருவரது மரணம் ரொம்பவும் அதிகமாகி விடாது.''

எனினும் அந்த அளவுக்குத் தீவிர சிகிச்சை இப்போதைக்குக் கையாளப் படவில்லை. மதிப்பு மிக்க அந்த உயிரைக் காக்கப் பல அம்சங்கள் உதவின. அம்பேத்காரின் நோக்கில் ஸி. ஆரின் சமயோஜிதம் அவற்றுள் ஒன்று. ''பேச்சு வார்த்தை முறியும் கட்டத்தில் இருந்தபோது ஸி. ஆர். எங்களைக் காப்பாற்ற வந்தார். அவருடைய சாமர்த்தியங்கள் செயல்பட்டிருக்க வில்லையானால் இந்த ஒப்பந்தம் ஒருவேளை உருவாகியே இருக்காது!'' என்றார் அவர்.

# 41- திறக்கப்படாத கதவுகள்

எதிர் காலத்தைக் குறித்து நம்பிக்கைச் சூழல் நிலவியது. ''ஜாதி வேற்றுமை ஒழிந்து ஒருவரை யொருவர் புரிந்து கொள்கிற காட்சி தேசத்தின் மனக் கண் முன்னால் தெரிகிறது'' என்று மகாத்மாவின் காரியதரிசி பியாரே லால் சொன்னார். 'ஹிந்து மதத்துக்குள்ளேயே இருந்த பிளவுகளுக்கிடையில் பாலம் அமைக்க முடியுமானால் ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் இணைக்க ஏன் முயற்சி எடுக்கக் கூடாது?' இந்த எண்ணம் பல பேருடைய உள்ளத்தில் புகுந்தது.

ஐந்து ஆண்டுகளாகப் பிரிந்திருந்த ஷௌகத் அலி மகாத்மாவுக்குத் தந்தி அனுப்பினார். தமது பழைய தலைவர் என்று அதில் காந்தியைக் குறிப்பிட்டு இந்து முஸ்லிம் ஒப்பந்தத்துக்கு அவரது ஆசிகளை வேண்டினார். ஹிந்துக்களிடையே மாளவியாவின் சொல்லுக்கு மதிப்பு அதிகம். அவரும் இம் முயற்சியில் சேர்ந்து கொண்டார். காங்கிரஸின் தாற்காலிகத் தலைவர் ஸி. ஆரும் இதில் பங்கேற்றார்.

1932 நவம்பரில் அலகாபாத்தில் ஒரு மகாநாடு நடந்தது. ஸி. ஆரின் நீண்ட கால நண்பர் விஜயராகவாச்சாரியார் தலைமை தாங்கினார். பிரிட்டனிலிருந்த ஜின்னா தவிர, எல்லா முக்கிய முஸ்லிம் தலைவர்களும் தங்களுக்குச் சமதையான இந்து சகாக்களைக் காண வந்தனர். ஜின்னாவும் ஷரத்துக்கள் நல்லனவாயிருந்தால் ஒப்பந்தத்துக்குச் சம்மதிக்குமாறு அறிவுரை அனுப்பி யிருந்தார். சீக்கியப் பிரதிநிதிகளும் வந்திருந்தனர்.

'வாக்காளர்கள் மத பேதமின்றி ஒட்டு மொத்தமாய் இருப்பார்கள்; முஸ்லிம்களுக்கும் சீக்கியர்களுக்கும் தனி இடங்கள் ஒதுக்கப்படும். அம்மதத்தவர் தங்களுக்குள்ளேயே முதல் வாக்கெடுப்பு நடத்தி அந்தந்தத் தனி இடங்களில் போட்டி யிடக் கூடிய வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பார்கள்' — ஸி. ஆரின் இந்த யோசனை ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டது. அலகாபாத் மகாநாடு மத்திய சட்ட சபையில் முஸ்லிம்களுக்கு 32 சதவீத ஸ்தானங்களை வழங்கியது. மேலும் முஸ்லிம் பெரும்பான்மையுள்ள ஸிந்து, பம்பாய் ராஜதானியிலிருந்து தனியே பிரிந்து தனி மாகாணமாவதை ஆமோதித்தது. (தொடரும்)

தமிழாக்கம்: டி. ராஜேந்திரன்

# வள்ளியப்பாவின் வள்ளிசான பணி

திரு அழ வள்ளியப்பா சென்னை பல்கலைக் கழகத்தில் இந்த ஆண்டு கல்கி நினைவுச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

தமிழில் குழந்தை இலக்கியத்தைப் பற்றிப் பேசத் திரு அழ வள்ளியப்பாவை விடச் சிறந்த சொற்பொழிவாளர் யார் இருக்க முடியும்?

வாழ்க்கையில் ஒரு லட்சியத்தைக்கொண்டு அதற்காகவே உயிர் வாழ்பவர்கள் சிலரே. இந்தத் திருக் கூட்டத்தைச் சேர்ந்தவர் திரு அழ வள்ளியப்பா. அவர் வாழ்க்கையில் லட்சியமாக வகுத்துக் கொண்டது தமிழில் குழந்தை இலக்கியத்தை நல்ல முறையில் வளர்ப்பது என்பதுதான். சென்ற நாற்பதாண்டுகளுக்கு மேலாகத் தாமே குழந்தைப் பாடல்கள், கதைகள் படைத்ததோடல்லாமல், குழந்தைகள் பத்திரிகை நடத்தியும், குழந்தை இலக்கிய எழுத்தாளர்களை ஊக்குவித்தும் வந்துள்ளார். சென்ற இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக குழந்தை எழுத்தாளர் சங்கம் சிறப்பாக நடத்தி வருபவர். ஆக்கத் திறனும் செயல் திறனும் ஒருங்கே அமையப் பெற்றவர்.



முதல் நாள் உரையில் குழந்தைப் பத்திரிகை வரலாற்றைச் சுருக்கமாகக் குறிப்பிடுகையில், 1840ம் ஆண்டுதான் நாகர் கோயில் கிறிஸ்துவ பிரசார சபையார் 'பாலதீபிகை' என்ற பெயரில் முதல் குழந்தைப் பத்திரிகை வெளியிட்டனர் என்றார்.

பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்கு நீதி போதனை செய்யக் கற்பிக்கப்படும் ஔவையார் பாடல்கள், கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை முதலியவற்றைச் சிலர் குழந்தை இலக்கியம் என்று நினைத்துக் கொண்டிருப்பது தவறு என்று சுட்டிக் காட்டினார். அதே போல் குழந்தை விளையாட்டை வர்ணிக்கும் தமிழில் உள்ள பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களைக் குழந்தை இலக்கியம் என்று சில பண்டிதர்கள் கூறி வருவதும் சரியல்ல என்பதை எடுத்துக் காட்டிவிட்டு, ''எளிய நடையில் இனிய சந்தத்தில் உள்ளத்தை நேரடியாகத் தொட்டு, உணர்ச்சியைத் தூண்டும் பாடல்களே குழந்தைப் பாடல்களாகும்'' என்று உணர்த்தினார். இந்த இலக்கணத்துக்கேற்பப் பாடக்கூடிய நூற்றுக் கணக்கான கவிஞர்கள் இருக்கிறார்கள் என்பதைப் பலப் பல சுவையான பாடல் மேற்கோள்களுடன் அவர் எடுத்துக் காட்டிய போது மெய் சிலிர்க்கத்தான் செய்தது.

இந்தியாவின் சரித்திரம்
எங்கள் கையிலே
இந்தியாவின் எதிர்காலம்
எங்கள் கையிலே

—மகிழ்ச்சிக் கண்ணன்

அனுமா ருக்கும் வாலதிகம்
அணிலா ருக்கும் வாலதிகம்
அதனால்தான் ராமா யணத்தில்
அவ்விரு வருக்கும் பேரதிகம்

அனுமார் அரிய
பணிசெய்தார்
அணிலார் ஆன
பணிசெய்தார்
அருமை ராமர்
இருவரையும்
அகிலப் புகழும்
படிசெய்தார்!

—தம்பி சீனிவாசன்

எவ்வளவு எளிமையாகவும் சுவையாகவும் இருக்கின்றன! வாழ்க குழந்தைக் கவிஞர்கள் என்ற எண்ணத்தை அவையோர் உள்ளத்தில் உண்டாக்கிவிட்டு முதல் நாள் உரையை முடித்தார்.

இரண்டாவதுநாள், சிறுவர்களுக்கான கதைகள், நாவல்கள், நாடகங்கள் பற்றியும் அவற்றின் வளர்ச்சியைப் பற்றியும் மிக விரிவாகக் கூறினார். முடிவில் பல துணிகரமான கருத்துக்களை வெளியிட்டார். அதில் ஒரு பகுதி:

''சித்தி என்றாலே கொடுமையின் உருவம் என்று சித்திரிக்கும் ''சின்ட்ரல்லா'' கதை போன்ற சில கதைகளைத் தமிழிலும் காண்கிறோம். இளம் வயதிலே தாயை இழந்து சித்தியால் வளர்க்கப்படும் குழந்தைகள், இத்தகைய கதைகளைக் கேட்பதனாலும், அண்டை அயலாரின் தூண்டுதலாலும் சித்தி நல்லதைச் செய்தால் கூடக் கெடுதல் செய்வதாக எண்ணி அவளை வெறுக்கத் தொடங்குவர். அன்பு மலர வேண்டிய

## SPORTS PICTURE

இந்தியா, கான்பூர் டெஸ்டில் ஆஸ்திரேலிய கோஷ்டியை வென்றது. டெல்லி டெஸ்டில் இந்தியா 510 ரன்களுக்கு மேல் எடுத்துச் சக்கைப் போடு போட்டது. தமிழகத்தின் ஒரே பிரதிநிதி வெங்கட் டெல்லியில் Dropout! ஆனால் சிதம்பரம் ஸ்டேடியத்தில் அவரது அபாரமான இடது கை காட்ச் சரித்திரப் பிரசித்தி பெற்றது. புகைப்பட நிபுணர் உத்ரா இந்த அபாரமான காட்சை ''ஆக்ஷன்'' துலங்க எடுத்து உங்களுக்கு வழங்கியிருக்கிறார்!

இந்தக் கிரிக்கெட் படத்துக்காகப் புகைப்பட நிபுணர் உத்ரா தரும் விளக்கம்:

பைனு டெலிஆஷாஹி பெண்டக்ஸ் காமிரா 400 ஏ.எஸ்.ஏ.யில் எடுத்தது: எப்பொழுதும் பைனே டெலிவிஷன் கையில் வைத்து எடுத்தால் ஷேக் தெரியும். அதனால் ஸ்டாண்டு போட்டு எடுத்தேன். கிரிக்கெட் ஆட்டத்தின்போது எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக இருந்து ஆக்ஷனை உற்றுப் பார்த்துக் 'கிளிக்' பண்ண வேண்டும். இது எடுத்தது 1/2500 400 ASA

வெங்கட்ராகவன் 'காட்ச்' மிஸ் பண்ணாமல் இருக்கணுமே என்று எனக்குத் தவிப்பு. அவர் காட்சை மிஸ் பண்ணி யிருந்தால் ஆக்ஷன் படம் அரோகரா! வெங்கட்டும் ஜோராய்ப் பிடித்தார்; படமும் நன்றாக அமைந்து விட்டது!

படம்: **உத்ரா** — விளக்கம்: **குண்டுமணி**

---

அப்பருவத்தில் வெறுப்பு விதைக்கப்படுகிறது. முளை விடும்போதே வாழ்க்கை கசப்பானதாகத் தோன்றுகிறது. இத்தகைய போக்கினை மாற்றும் வகையில் அன்புள்ளம் கொண்டுள்ள சித்தியின் கதைகளைச் சிலர் எழுதியிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

''பழிக்குப் பழி வாங்குவதைப் பாராட்டுவது, பிற இனத்தவர், மொழியினர் மீது வெறுப்பைத் தூண்டுவது; குரூரச் செயல்களையும், கொள்ளைகளையும் விவரித்து எழுதுவது — இவற்றுக்கெல்லாம் குழந்தைக் கதைகளில் இடமளிக்கலாகாது.''

இதில் என்ன அதிசயமான கருத்தைச் சொல்லிவிட்டார் என்று பாராட்டுகிறீர்கள் என்று கேட்பவர்களுக்கு ஒன்று நினைவு படுத்த விரும்புகிறேன்:

"எது அதிக விற்பனையாகிறதோ, அது தான் சிறந்தது! அதைக் குறைத்துப் பேசிப் பொல்லாப்பைச் சம்பாதித்துக் கொள்வானேன்!' என்று பரவலாகப் படித்த மக்களிடையே கூடக் கருத்து நிலவும் காலம் இது.

மூன்றாவது நான் உரையில் வாழ்க்கை வரலாறு, விஞ்ஞானம், ஆகிய துறைகளில் குழந்தை இலக்கியம் எவ்வளவு தூரம் முன்னேறி இருக்கிறது என்பதனை ஒரு விரிவான பரிசீலனை செய்து குறிப்பிட்டபோது வியப்பாகத்தான் இருந்தது. 'அறிவியலில் குழந்தைகள் — சிறுவர்களுக்கென்று இத்தனை நூல்களா தமிழில் வெளி வந்துள்ளன!' என்ற அதிசயம் ஏற்பட்டது;

அறிவியல் நூல்களை எழுதி அதிகமான பரிசுகளைப் பெற்றவர் கல்வி கோபால கிருஷ்ணன். இந்திய அரசிடமிருந்து ஆறு பரிசுகளும், யுனெஸ்கோவிடமிருந்து மூன்று பரிசுகளும், தென் மொழிப் புத்தக டிரஸ்டிடமிருந்து ஒரு பரிசும் ஆக பத்துப் பரிசுகள் பெற்றவர்.

கடைசியில் திரு வள்ளியப்பாவின் ஓர் அரிய கருத்துடன் இதனை முடிக்கிறேன்.

''கதையும், கவிதையும், நாடகமும் குழந்தைகளின் பண்பை வளர்க்கவும் விஞ்ஞானம் மற்ற கட்டுரைகளும் அவர்களின் அறிவை வளர்க்கவும் பெருந் துணை புரியக் கூடியவை.

''நம் குழந்தைகளுக்கு அறிவும் தேவை. பண்பும் தேவை. உழுத நிலத்தில் அரிசியையோ உமியையோ தனித்தனியாக விதைத்தால் பயிர் விளையாது. உமியும் அரிசியும் ஒன்றுசேர்ந்த நெல்லை விதைத்தாலே பயிர் விளையும் என்பதனை நாம் நன்கறிவோம். அதே போல்தான் அறிவும் பண்பும் கலந்ததாக வாழ்க்கை அமைய வேண்டும். அறிவு பெருகி நெஞ்சம் குறுகி வருகின்ற சூழ்நிலையை அன்றாடம் காணுகின்ற, நாம் எதிர்காலக் குடிமக்களையாவது இரண்டும் பொருந்தியவர்களாக உருவாக்க வேண்டும்.''

— **எஸ்.வி.எஸ்.**

FOCUS

# நெம்பர் 57, வனிதா அவென்யு

சென்னை சேத்துப்பட்டில் உள்ள வனிதா அவென்யூ இல்லம் களை இழந்து காணப்படுகிறது. இம்மாதம் 12ம் தேதி வெள்ளி இரவு அதில் வசித்த ஸ்ரீமதி ராஜலட்சுமி கொலை செய்யப்பட்டார்.

சோகமே உருவாகக் கிடந்த இவரின் பேரன் திரு பிரபாகர் மெல்லத் தம்மைச் சுதாரித்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார்: ''பத்தாம் தேதி என் சகோதரி மஞ்சுவுக்குத் திருமண நிச்சயதார்த்தம் நடந்தது. இதற்காக உறவினர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். எல்லோரும் சில நாட்கள் தங்கிப் போகலாம் என்று முடிவாயிற்று.

12ந் தேதி இரவு மொத்தமாக நாங்கள் பதினாறு நபர்கள் நான்கு பிரிவுகளாகப் பிரிந்து நான்கு திரைப் படங்களுக்கு இரவுக் காட்சிக்குச் செல்லத் திட்டமிட்டோம். அப்போது என் பாட்டி ராஜலட்சுமியுடன் தாத்தாவும், என் மாமனாரும் காவலுக்காகத் தங்கினார்கள். அத்துடன் எங்கள் உறவினரின் சிறு குழந்தைகளும் தங்கின. ''போய் விட்டு வருகிறோம் பாட்டி!'' என்று எல்லோரும் ஒன்று சேரக் கூறிவிட்டு விடை பெற்றோம். மெல்லச் சிரித்தவாறு வழியனுப்பினார் அவர். நாங்கள் அவ்வளவு பேரும் அன்று போல் சேர்ந்து எப்போதும் வெளியே சென்றதில்லை.

பாட்டி எப்போதும் தனியாகத் தம் அறையில் படுப்பது வழக்கம். மற்ற இருவரும் வெளியே படுத்திருந்தனர். வாசலில் நாய் கட்டப்பட்டிருந்தது.

இரவு சுமார் 1-30 மணிக்கு எல்லோரும் அரட்டை அடித்துக் கொண்டே வந்தோம். தாத்தா கதவைத் திறந்தார். பாட்டி உள்ளே அயர்ந்து தூங்குவார் என்பதால் யாரும் வந்ததை வெளிக்காட்டவில்லை.

மறுநாள் காலை வழக்கம் போல் 7-30க்குக் காப்பி சாப்பிட வரும் பாட்டியை எதிர்பார்த்தோம். அவர் வரவில்லை. கதவைத் தட்டியும் பயனில்லை. வெளியே வந்து ஜன்னல் வழியாகப் பார்த்தபோது, கயிற்றால் கழுத்து நெரிக்கப்பட்டுப் பாட்டி பிணமாகக் கிடந்தார். அவர் போட்டிருந்த நகைகளைக் காணோம். ஜன்னல் கம்பிகள் பெயர்க்கப் பட்டிருந்தன. கொலை நடந்ததைப் பார்த்தால் சுமார் இரண்டு மணிக்கு மேல் நடந்திருக்கலாம் என்றும், இருவரோ அதற்கு மேற்பட்டவரோ திட்டமிட்டுச் செய்த காரியம் என்றும் தோன்றுகிறது!'' பிரபாகர் முடித்தபோது தொண்டை கம்மியது.



திருமதி ராஜலட்சுமியின் மகனும், பிரபாகரின் தந்தையுமான திரு துவாரகநாத் கண்களில் சோகத்தின் சாயல் படர்ந்திருக்கிறது. நா தழுதழுக்க வார்த்தைகள் வெளிப்படுகின்றன: ''என் தாய் மற்றவர்களிடம் அதிகமாகப் பேசா விட்டாலும் ரொம்ப ஜாலி டைப்தான். சர்க்கரை வியாதி உண்டு. வெளியே எங்கும் செல்வதில்லை. தவறாமல் தினம் டி. வி. பார்ப்பார். அவருக்குப் போட்டோ எடுத்துக் கொள்வது என்றாலே அலர்ஜி. ''நானே பெரிய உருவம், என்னைப் போட்டோவில் அடக்க முடியுமா?'' என்று வேடிக்கையாகக் கேட்பார். என் மகன் திருமணத்தின்போதுதான் அவர் கடைசியாகப் படம் எடுத்துக்கொண்டார்.

''அவருக்கு எல்லாப் பண்டிகைகளும் ரொம்பப் பிடிக்கும். கிறிஸ்துமஸ், பக்ரீத், தீபாவளி அனைத்தையும் மத வேற்றுமை பார்க்காமல் கொண்டாடி மகிழ்ச்சி அடைவார். தமது பிறந்த நாளுக்குத் தவறாமல் கேக் வெட்டுவார்.

''அவரது வாழ்நாள் முழுவதும் ஒரு ராணியைப் போல் வாழ்ந்தார் என்றுதான் சொல்ல வேண்டும். நல்ல ரசிகர். கறி ருசியாகச் சாப்பிடுவார். ஒவ்வொரு நாளும் நல்ல புடவையாக உடுத்தி நகைகளும் அணிவார். நகைகள் அணியத்தானேயன்றி உள்ளே பூட்டி வைக்க அல்ல என்பது அவர் சித்தாந்தம். நாங்கள் எவ்வளவு தடுத்தாலும் பல ஆயிரக் கணக்கான மதிப்புள்ள நகைகள் அவர் உடம்பில் எப்பொழுதும் தவழும். பயந்த சுபாவம் கொண்டவர். இது போன்ற கொலை நிகழ்ச்சியைச் செய்திப் பத்திரிகையில் படித்தாலும் பயந்துவிடுவார். அவரது நகைகளுக்காகத்தான் இந்தக் கொலை நடந்துள்ளது என்பது என் அபிப்பிராயம். இதை அவர்கள் மிரட்டியிருந்தாலே பெற்றிருக்கலாம். அநியாயமாக ஓர் உயிரைப் பணயம் வைக்க வேண்டுமா?'' என்று சொல்லும் போதே கண்ணீர் அவர் கண்களில் ததும்பி நிற்கிறது.

போலீஸ் விசாரணை நடப்பதால் வந்த உறவினர்கள் வீட்டிலேயே தங்கியுள்ளனர்.

FOCUS

## வல்லவனுக்கு வல்லவன்!

கோட்டு வாத்திய மேதை நாராயண ஐயங்காரின் பேரன் ரவிகிரன், சின்னவயதிலேயே எந்தப் பாடலின் ராகத்தையும் கண்டு பிடிப்பதில் வல்லவனாக விளங்கினான் என்பது எல்லோருக்கும் தெரியும். இன்று அவனுக்குப் பன்னிரண்டு வயது. இவனை மிஞ்சுவதில் மூன்று குழந்தைகள் இப்போது போட்டி போடுகிறார்கள் — அதே குடும்பத்தில் என்பது புதுச் செய்தி.

ரவியின் தம்பி சசிகரன் (ஒன்பது வயது) தங்கை கிரணாவளி (ஆறு வயது) ஆகியோருடன் அத்தை மகன் கணேஷ் (மூன்று வயது) சக்கைப் போடு போடுகிறான். சசியும் கிரணாவும் ஐம்பது வர்ணங்களில் தேர்ச்சி பெற்றுள்ளனர். எழுபத்தி இரண்டு மேளகர்த்தா ராகங்களும் இவர்களுக்குத் தண்ணீர் பட்ட பாடு. யார் எந்தப் பாடல் பாடினாலும் ராகத்தைக் கூறிவிடுகிறார்கள். ராகம் சம்பந்தப்பட்ட கேள்விகளுக்கு இருவரும் பதிலளிக்கிறார்கள். படிப்பிலும் புலிகள் தான்! இவர்களை இந்த அளவுக்கு உருவாக்கிய தந்தை நரசிம்மன், இவர்களின் இசைக்காகவே தம் நேரம் முழுவதையும் அர்ப்பணித்திருக்கிறார்.

''இவர்களை ஒரு விஷயத்தில் மட்டும் எனக்குப் பிடிக்காது. மூவரும் ஒரே சமயத்தில் சண்டை போட்டு ஆட்டி அடிக்கும் போது'' என்று சிரித்தவாறு கூறுகிறார் ஸ்ரீமதி சூடாமணி நரசிம்மன்.

## நெடுமாறன்

"இவ்வளவு நாட்கள் இந்திரா காங்கிரஸுடன் தொடர்பு வைத்திருந்த நீங்கள் திடீரென்று விலக்கப்பட்ட காரணம்? இந்திரா — தி. மு. க. கூட்டணிதான் இதற்குக் காரணமா?''

நெடுமாறன் பதிலளிக்கிறார்: ''தி.மு.க. இந்திரா உறவு திடீர் உறவு. இந்த உறவு வேண்டுமா வேண்டாமா என்று இங்கு யாரையும் குறிப்பாக இந்திராவுக்கு எக்காலமும் உதவியாக இருந்த என்னைக் கூடக் கலந்தாலோசிக்கவில்லை. தமிழ் நாடு காங்கிரஸ் தொண்டர்கள் மிகவும் அதிர்ச்சி யடைந்தார்கள். புதுடில்லியில் ஒப்பந்தம் நடந்து முடிந்து இங்கு தமிழ் நாட்டில் காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொள்ளும்படியாகி விட்டது. தி. மு. க. — இந்திரா காங்கிரஸ் எப்போதும் சேர்ந்திருக்க முடியாது. அடிப்படைக் கொள்கைகள் முரண்பட்டவை. பாசிசப் போக்கு, வன்முறைச் செயல்களில் ஈடுபடுதல் போன்ற எண்ணங்களைக் கொண்டது தி. மு. க. ஆனால் சகிப்புத் தன்மை, ஜனநாயகம், தேசிய ஒருமைப்பாடு ஆகிய கொள்கைகளை உடையது இந்திரா காங்கிரஸ். இவை எப்படி உறவாட முடியும்? 'இராமன் இருக்குமிடம் அயோத்தி, அது போல இந்திரா இருக்கும் இடம் காங்கிரஸ்' எனக் கூறியவன் நான். ஆனால் இராமனே ராவணனுடன் உறவு கொள்கிறான் என்றால் மனம் மிகவும் வேதனைப்படுகிறது. இந்த உடன்பாடு வெளியான அடுத்த நாளே, இதை மறுபரிசிலனை செய்யுமாறு நான் எழுதிய கடிதத்தை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை. வந்தது பதில் அல்ல! என்னைக் கட்சியிலிருந்து சஸ்பெண்ட் செய்து தந்தி!''

''நீங்கள் மட்டும் தேர்தலில் வேற்றுக் கட்சிகளுடன் கூட்டுச் சேரும்போது அவர்களுடைய கொள்கைகள் உங்கள் கட்சியைப் பாதிக்காதா?''

''எங்கள் நோக்கம் இந்திராவுடன் போரிடுவது அல்ல. தி.மு.க.வை முறியடிப்பதே. தி.மு.க.வினர் எந்தக் கட்சியுடன் கூட்டுச் சேர்ந்தாலும் அக்கட்சி வாழ்ந்தது இல்லை. தி.மு.க.வை முறியடிக்க முயலும் நல்ல அணியுடன்தான் கூட்டுச் சேருவோம்.''

''நிலையான ஆட்சி அமைய இந்திராவை ஆதரிப்பதாகக் கூறுகிறாரே கருணாநிதி?''

''நிலையான ஆட்சியாவது? இந்திரா—தி.மு.க. அமைச்சரவையே அமைக்க முடியாது. நாற்காலி மோகத்துக்காக எதை வேண்டுமானாலும் செய்பவர்களுக்கு மக்களின் ஆதரவு எப்படிக் கிட்டும்?'' என்கிறார் நெடுமாறன். பேட்டி: ''சிக்கி''





# வைரங்கள்

சுஜாதா



## அத்தியாயம் 13

## இன்னும் சில வைரங்கள்

இன்ஸ்பெக்டர் செல்வராஜ் ஆஸ்பத்திரிக்கு வந்தபோது காலை ஒன்பது மணி. நேராகக் 'காஷுவாலிடி'யைக் கடந்து, தவிர்க்க முடியாத வாசனைகளின் ஊடே நடந்தார். இருபத்தி எட்டாம் எண் அறையில் பாதிக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்றார். டாக்டர் இல்லை. அவர் வரட்டும் என்று நாற்காலியில் உட்கார்ந்தார். தன் தொப்பியை எடுத்து மடியில் வைத்துக் கொண்டார். ஜன்னலுக்கு வெளியே மலை தெரிந்தது.

செல்வராஜ் மதுரைக்காரர். சமீபத்தில்தான் கோவைக்கு மாற்றலாகி வந்திருப்பவர். கோவையின் பாஷையும் ஜாடைகளும் அவருக்கு இன்னும் பிடிபடவில்லை. ஒரு சின்னப் பையனை அவ்வளவு மூர்க்கத்தனமாக அடித்துச் சாலையோரம் மூச்சுப் பேச்சின்றிப் போட்டுவிட்டு ஓடக் கூடிய மனிதர்கள் இந்த நகரத்தில் இருக்கிறார்கள் என்பது செல்வராஜுக்குக் கவலையும் அச்சமும் தந்தன. எங்கே இந்த டாக்டர்? அவசரமாகப் போன் செய்திருந்தாரே அந்தப் பையன் எப்படி இருக்கிறான்? வார்டுக்குச் சென்று பார்த்துவிட்டு வரலாமா? இல்லை; டாக்டர் வரட்டும்.

ப்ரேம் கவலையாகத் தன் தகப்பன் முன் உட்கார்ந்திருந்தான். பெரிய சேட் இடித்த வெற்றிலை பாக்கைப் பற்கள் அதிகமற்றுக் கடித்து மென்று மென்று கொண்டே பேசினார்.

"நான் அப்பொழுதே எச்சரித்தேன். நீ கேட்க மாட்டேன் என்றாய். எல்லாம் புதிதான விஷயம். நமக்கு ஒத்து வராது. அதில் தலையைக் கொடாதே. நஷ்டப்படுவாய்" என்றேன். "எத்தனை நஷ்டம்?"

"நாற்பத்தி ஆறு."

"ஒன்றுமே கிடைக்கவில்லையா?"

ப்ரேம் உதட்டைப் பிதுக்கினான்.

"பேட்டா! நாற்பத்தி ஆறாயிரம் பெரிசல்ல. அதை ஒரு வருஷத்தில் சம்பாதித்துவிடலாம். இதிலிருந்து நீ படிப்பினை கற்றுக் கொண்டாயா என்பதுதான் தெரிய வேண்டும் எனக்கு."

"பைப் லைன் என்று சொல்கிறார் ப்ரொபசர் சீனிவாச சர்மா. பூமிக்கு அடியில் ஒரு சரடு போல் இருக்குமாம். அது மட்டும் கிடைத்துவிட்டால் வைரம், வைரம், வைரங்கள்தானாம்!"

"நீ படிப்பினை ஏதும் கற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. மகனே! சர்க்கார் தோண்டாத வைரமா? அவர்கள் விட்டு வைத்திருப்பார்களா? சர்க்காரிடம் இல்லாத சாதனங்களா? அதிருக்கட்டும்! முதலில் ஓர் அழுகருக் கல் காட்டினியே அது எங்கே?"

"அதைக் காணவில்லை."

கிழவனார் நக்கலாகச் சிரித்து, "நமக்கும் அதற்கும் ராசியில்லை. போனால் போகுது. எனக்குப் பாக்கு இடிக்கக் கல் அகப்பட்டது என்று நினைத்தேன். மகனே... நமக்குப் புதுசாக பிஸினஸ் எதுவும் வேண்டாம். நீ ஒன்றும் என் சாம்ராஜ்யத்தை விஸ்தாரம் பண்ண வேண்டாம். இருக்கிறதை ஒழுங்காக நடத்தினாலே மூன்று தலைமுறைக்குப் போதும். பைப் லைனும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்."

ப்ரேம் அவர் காலைத் தொட்டு நமஸ்கரித்துவிட்டுக் கீழே இறங்கி வந்து தன் அறைக்குச் சென்றான். சின்னி காத்துக் கொண்டிருந்தான்.

"என்ன சின்னி, எல்லாம் ரெடியா?"

அவன் மௌனமாகத் தலையாட்டினான்.

"எனக்குப் பயமா இருக்குது எஜமான்."

"பயமே கிடையாது. மூணு மணிதான் ஆவும்னு டாக்டர் சொன்னாரு. இந்தா இதை வெச்சுக்க. நீ என்ன செய்யறே நேரா ஆட்டோப் பிடிச்சு அந்த இடத்துக்கு நாளைக் காலைல வந்துரு. நான் கார் எடுத்துக்கிட்டு வர்றேன். ஒன்றும் சாப்பிடாம வா. என்ன? இத பார். கவலைப்படாதே" என்று அவனைத் தன்பால் இழுத்து அமுக்கிக் கொடுத்தான்.

பெரியசாமி ஏதோ ஒரு மானசீகக் கடவுளை வணங்கிவிட்டுக் கடப்பாறையால் நிலத்தை முதல் கொத்தாகக் கொத்தினான்.

கட்டியாக, ஏறக் குறைய பாறையாக நிலம் எதிர்த்தது. பஞ்சாயத்துக்காரர்கள் ரெவின்யூ அதிகாரிகள் எல்லோரும் இப்போது இதைத்தான் அவன் நிலம் என்று காட்டுகிறார்கள். இந்த இடத்திலிருந்து ராவிமுக்கு ஒன்றரை மைலுக்கு மேலிருந்தது. இந்த இடம் ஏறக் குறைய மலை மடியில் இருந்தது. கன்னங் கரேல் என்று மண். அருகே சுனை இருக்கிறது. இருந்தாலும் இந்த இடத்தில் ஏதும் விளையும் என்று தோன்றவில்லை. முதலில் ஒரு கூரை வேண்டும். ஆலனும் திலகமும் மனோகரியும் நிற்க நிழல் வேண்டும். அதுதான் ஆதாரமான விஷயம். அப்புறம்தான் மற்றவை. அப்புறம்தான்

வெவ்வேறு பாசங்கள் ஆசைகள். எல்லாமே நிழல் கிடைத்த பிற்பாடுதான்.

மூங்கில் கம்புகள், பிளாச்சுகள், ஓலைக் கூரை, கயிறு, மண்வெட்டி... திலகத்தின் நகைகளை விற்றதில் மிச்சம் இருந்ததில் வாங்கிப் போட்ட சாதனங்கள். பெரியசாமி அவன் புதிய வீட்டில் புதிய முதல் மூங்கிலை நட்டான். அருகே பத்தடி தூரத்தில் திலகம் பள்ளம் தோண்டிக் கொண்டிருந்தாள். மனோகரி விளையாடிக் கொண்டிருந்தது.

பெரியசாமிக்குப் பட்டணத்து ஆசாமிகளைப் புரியவில்லை. ஒரு வாரத்தில் கலெக்டரிடமிருந்து உத்தரவு வரும் என்று அந்த ஆசாமி சொல்லிப் போட்டான். பத்து நாளாச்சு. ஒன்றுமில்லை. பஸ் ஏறி கலெக்டர் ஆபீசுக்குப் போய்த் தேடிப் பார்த்தான். அவனுக்காக மனு எழுதிக் கொடுத்த அந்த



இருபத்தி அஞ்சு ரூபாய் ஆசாமியைக் காண வில்லை. எதிரே டைப் அடித்துக் கொடுத்த இடத்தில் வேறு யாரோ வெள்ளரிக்காய் விற்றுக் கொண்டிருந்தார்கள். டைப் அடித் துக் கொடுத்தவர் முகம் மறந்து போச்சு. அந்த இருபத்தி ஐந்து ரூபாய் ஆசாமியின் முகம் ஞாபகம் இருந்தது. ஆனால் அவன் பெயர் தெரியவில்லை. சொல்லியிருந்தான். மறந்து போய்விட்டது. யாரைப் பார்த் தாலும் அவன் சாயல் தெரிந்தது. கோய முத்தூர் பட்டணமே அந்த முக ஜாடை நிறைந்த மனிதர்கள் நிறைந்ததாக இருந் தது. பேசாமல் கிடைத்த நிலத்தை ஒப்புக் கொண்டு அதில் பாடுபட வேண்டியதுதான். இந்த மட்டும் கொடுத்தார்களே. இது கூட இல்லை என்று சொல்லியிருக்கலாம்.

நிலகம் மண்ணைத் தோண்டுகையில் கடப்பாரை குத்தும்போது அவள் உள்ளே இருந்த ஆத்திரங்கள் எல்லாம் ஆழமாகப் பாய்ந்தது. இந்தக் குத்து பாழாய்ப்போன தாலிக்கு. இந்தக் குத்து வாய்ப்பை இழந்த குடிகாரக் கணவனுக்கு. இது என் கையைப் பிடித்து இழுத்த சேட்டுப் பையனுக்கு. இது என் மகளுக்குப் பார்க்காத வைத்தியத்துக்கு.

மனோகரிக்குக் காதரின் வடிவம் மனத்தில் நிழலாடியது. அவன் ஆடினதும் பாடினதும் குரங்கு மாதிரிப் பண்ணி அவளைச் சிரிக்க வைத்ததும்.... எங்கே அவன்? குழப்பமாக இருந்தது. அன்றைக்குப் பந்தாடினதும் திடுதிப்பென்று அம்மா அவளைத் தர தர வென்று இருட்டில் பயமாக அழைத்துச் சென்றதும் பஸ்ஸில் போகும்போது அம்மா வின் மேல் ரத்தமும் அம்மா அழுததும்... அப்புறம் அந்தப் பையன் என்ன ஆனான்? ஏன் அவனை இன்னும் காணவில்லை? ஏன் எல் லோரும் இங்கு வந்து விட்டோம்? அவன் எங்கே? எவ்வளவு கேள்வி வார்த்தை வடிவ மற்று அவள் மனத்துக்குள் ஏதோ ஓர் ஏக்க மாக, தாபமாக, ஒரு குறையாக இருந்தது? வருவான் என்கிற எதிர்பார்ப்பும் இருந்தது.

**டா**க்டர் உள்ளே வந்து செல்வராஜைப் பார்த்துவிட்டு, ''ஓ! வந்துவிட்டீர்களா?'' என்றார்.



''அந்தக் கேஸ் அனுப்பிச்சீங்களே பத்துப் பதினைஞ்சு நாளைக்கு முன்னாலே?''

''ஆமாம்'' என்றார் இன்ஸ்பெக்டர். ''பையன் எப்படி இருக்கிறான்?''

''அவன் இறந்து போய்விட்டான்!''

''அடடா! ச்ச்ச்ச்....'' செல்வராஜ் சற்று நேரம் செயலற்று, பேச்சற்றுப் போனார்.

''அவன் யாருங்க?''

''தெரியலீங்களே?''

''இன்னும் கண்டு பிடிக்கலியா?''

''இல்லேங்க!'' சற்றுத் தயங்கி ''இன்னும் இல்லேங்க'' என்றார்.

''பாடியை என்ன பண்றது?''

''பாடி எங்கே இருக்கு?''

''வார்ட்லதான் இருக்கும். இன்ஸ்ட்ரக்ஷனுக்காகக் காத்திருப்பாங்க. மார்ச்சுவரிக்கு அனுப்பிறலாம். போஸ்ட்மார்ட்டம் ஒண்ணு செய்துறலாம்.... போலீஸ் கேஸ் பாருங்க!''

''டாக்டர்! அவன் எதனாலே செத்தான்?''

''அடி! வேறு ஒண்ணும் கிடையாது. யாரோ அவனைச் செம்மையா மிதித்திருக்காங்க! அடின்னா அப்படி அடி! இது விபத்து இல்லே. வேறு எதுவும் கிடையாது. கடுமையா அடிச்சு மண்டையிலே பட்ட பிரதான காயம். மூளைக்குள்ளே ரத்தக் கசிவு... வாங்க போய்ப் பார்க்கலாம்.''

இருவரும் மௌனமாக நடந்தார்கள். இருவரும் மரணத்தை அடிக்கடி சந்தித்தவர்கள்தாம். இருந்தும் இந்தச் சாவு அவர்களைக் கலக்கியது. ''சின்னப் பையன் சார்!'' என்றார் டாக்டர். ''அவனை இந்த மாதிரி அடிச்சவன் யாருன்னு கண்டு பிடிச்சா எனக்காக ஒரு சாத்துச் சாத்துங்க அவனை.''

வார்டில் மற்ற நோயாளிகளுக்குக் கலக்கம் ஏற்படாமலிருக்கக் காதரின் படுக்கையைச் சுற்றிலும் சக்கரத் திரை அமைத்திருந்தது. அதைத் தள்ளிக் கொண்டு டாக்டர் உள்ளே வர, கூட செல்வராஜ் தயங்கி வந்தார். ஆக்ஸிஜன் குழாய்கள் பிடுங்கப்பட்டு ஒதுங்கியிருந்தன. கார்டியாக் மானிட்டர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது. எத்தனை கட்டுக்கள்! அவைகளின் மத்தியில் அந்தச் சிறுவன் கண் மூடித் தூங்குபவன் போலத்தான் இருந்தான். முகத்தில் சாந்தியும் அமைதியும் தெரிந்தது. இறந்தவனே நீ யார்?

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



திமிங்கலம், ஆர்க்டிக் குளிர் பிரதேச நீர்நாய் ஆகியவற்றின் வயிற்றில் 350 முதல் 500 கிராம் வரை எடையுள்ள கற்கள் ஏராளமாக இருப்பது கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. இக்கடல் விலங்குகள் அடிக்கடி இக்கற்களை கடற்கரையில் உள்ள மணல் திட்டுகளில் வாந்தி எடுத்துவிடும்.

— அ.ரா

இன்ஸ்பெக்டர் செல்வராஜ் சற்று நேரம் அவனுக்காக முருகனைத் தியானித்தார். ''பையன் எதுவும் பேசவே இல்லீங்களா?''

''இருங்க கேட்டுச் சொல்கிறேன். நர்ஸ்! ஸ்டாஃப் யாரு? வார்ட்ல டாக்டர் இருந்தா கூட்டிக்கிட்டு வாங்க.''

வயதான ஸ்டாப் நர்ஸும் ஓர் இளம் டாக்டரும் வந்தார்கள். ''டாக்டர் முரளி நாதன்! இந்தப் பையனுக்கு நினைவு திரும்பவே யில்லீங்களா?''

முரளிநாதன் காலடியில் தொங்கிய சார்ட்டைப் பார்க்க ஸ்டாஃப் நர்ஸ் ''வந்துச்சு டாக்டர் ஒரு முறை வந்துச்சு.'' என்றாள்.

''அப்ப ஏதாவது பேசினானா?''

''பேர் கேட்டம். காதர்னு சொன்னான். அப்புறம் தெரிஞ்சவங்க அட்ரஸ் பேரு கேட்டம். மனோகரின்னு சொன்னான். எழுதி வைச்சிருக்கேன். 'உன்னை யார்ரு இந்த மாதிரி அடிச்சாங்க'ன்னு கேட்டதுக்கு 'சின்ன எஜமான்'னு சொன்னான்; அவன் யாருன்னு கேட்டேன். தெரியாதுன்னான்.... மறுபடியும் மயக்கமாயிட்டான். அதுக்கப்புறம் நினைவே வரலே.''

இன்ஸ்பெக்டர் ஆஸ்பத்திரி பழுப்புக் காகிதத்தில் மனோகரி, காதர் என்று குறிப்பிட்டுக் கொண்டார். ''சின்ன எசமான்...''

''வேறு ஒண்ணுமே சொல்லலியா?''

''இல்லீங்க. பெரும்பாலும் மயக்கத்தில் இருந்தான்'' என்றாள்.

இளமையாக இருந்த நர்ஸ் ஒருத்தி ''ஆஸ்பத்திரிக்கு அட்மிட் பண்ணபோது அவன் பைக்குள்ள இருந்தது'' என்று தலைமாட்டுக்கு அடியில் இருந்து இன்ஸ்பெக்டரிடம் எடுத்துக் கொடுத்தாள். மஞ்சளாக ஒரு டென்னிஸ் பந்து. சேரன் போக்குவரத்துக் கழக பஸ் டிக்கெட் மூன்று, முப்பத்து ஐந்து பைசா சில்லறை.

காதர் விட்டுப் போன சொத்து. அந்தப் பெண்ணுக்கு அவைகளைத் தரும்போது கண்ணில் கண்ணீர் தெரிந்தது. ''நாங்க எல்லாரும் ரொம்ப முயற்சி பண்ணினோம் ஸார். அவனைப் பிழைக்க வைக்கிறதுக்கு...''

இன்ஸ்பெக்டர் அந்தப் பந்தை ஆராய்ந்து கொண்டே ஒரு தடவை படுக்கையைப் பார்த்துவிட்டு வெளியே வந்தார்.

''பாடியை என்ன பண்றது?''

''போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் ஒண்ணு கொடுத்துருங்க. அப்புறம் போலீஸ் போட்டோக்கிராபர் ஒருத்தரை அனுப்பி வைக்கிறோம். பின்னால இடெண்டிஃபிகேஷனுக்கு போட்டோ வேணும். அதுக்கப்புறம் புதைச்சுடலாம்.''

''சரி.''

''டாக்டர் முரளிதரன், இவன் இறந்து போய் எத்தனை நேரமாச்சு? கண்களை உபயோகப்படுத்த முடியுமா?''

''ஒரு மணி நேரம்தான் ஸார்! பாடிகூட அனட்டமி டிபார்ட்மெண்டில உபயோகப்படும்...''

''வேண்டாங்க.''

ஆஸ்பத்திரிக்கு வெளியே வரும்போது அந்தப் பந்தை எடுத்து ஆராய்ந்தார். மெலிதான மஞ்சளான டென்னிஸ் பந்து. டென்னிஸ் கோர்ட்களில் விசாரிக்க வேண்டும்.


அறிமுகம்:
ஒரு புதிய பெயர்
ஒரு புதிய நடை
ஒரு புதிய விறுவிறுப்பு!
மதஞ மிருத்தியுஞ்சயன் எழுதும்
முற்றுப்பெறாத வாக்கியங்கள்...
தொடர்கதை
கல்கி
நவம்பர் 4உ
இதழில்
ஆரம்பம்.

அங்கே பந்து பொறுக்கிப் போடும் பையனு? காதர், சின்ன எசமான்... எல்லா டென்னிஸ் கோர்ட்டுகளிலும் விசாரிக்க வேண்டும். அந்தப் பையன் அணிந்திருந்த சட்டை நிஜாரில் ஒரு ரெடிமேட் கடையின் பெயர் இருந்தது. அங்கே விசாரிக்க வேண்டும்.

ஜீப்பில் உட்கார்ந்தார்.

''ஸ்டேஷனுக்கா ஸார்?''

''இல்லேப்பா மருதமலே ரோடு.''

மறுபடியும் அந்தப் பையனின் உடல் அகப்பட்ட அந்தச் சாலையில் போய்ப் பார்க்கலாம்... அருகே விசாரித்துப் பார்க்கலாம்... டென்னிஸ் பந்து! டென்னிஸ்!

ஜீப் விரைந்து செல்ல அவர் உள் மனத்துக்குள் ஒரு வைராக்கியம் பிறந்தது. 'இந்தக் கேஸை நான் விடமாட்டேன். விடப்போவதில்லே. அந்தப் பையனின் முகம் அடிக்கடி அவர் ஞாபகத்தில் குறுக்கிட்டது...காதர்... டென்னிஸ்... இதோ இந்த மரத்தடியில் தான் சாலைக்கு ஒதுக்குப்புறமாகக் கிடந்தான். ''மெல்லப் போப்பா!'' ஜீப் ஊர்ந்தது. இரு புறமும் பார்த்துக் கொண்டே சென்றார். வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் டென்னிஸ் கோர்ட்டுகள் இருக்கும். அங்கே விசாரிக்க வேண்டும். சின்ன எஜமான்!... பல்கலைக் கழகத்தின் சின்ன எஜமானு?

பரிசோதனை வயல்களைத் தாண்டி ஏறக்குறைய அந்த ஸ்தலத்திலிருந்து ஒரு மைல் வந்துவிட்டார். 'இரும்பிப் போய்விடலாம் ...ம்ஹூம்... இது என்ன?'

சாலையிலிருந்து ஒரு பாதை விலகிச் சென்றது. தூரத்தில் வேலி தெரிந்தது. பெரிய மரத்தின் மடியில் ஒரு வீடு. பண்ணை போல. அப்புறம் அது என்ன?

கறுப்புத் தட்டிகளால் மறைக்கப்பட்டு டென்னிஸ் கோர்ட்!

''ஜீப்பை நிறுத்துப்பா! ஜீப்பை அந்த மண் பாதையில் விடு!'' என்றார்.

அந்த வீட்டை அணுக அணுக அவர் இதயத் துடிப்பு அதிகரித்தது. பெரிய மரம். அதன் நிழலில் வீடு... அதன் வாசலில் ஒரு கிழவன் பூஞ்செடிகளுக்கு நீர் இறைத்துக் கொண்டிருக்க ஜீப்பை நிறுத்தி இறங்கி அவனை அணுகினார்.

''தாத்தா! வணக்கம்.''

''வணக்கமுங்க!'' என்றான் கிழவன். கண்களில் கலக்கம். சற்று பயம். ''போலீஸ் காரவுங்களா?''

''பயப்படாதீங்க! உங்க சின்ன எஜமான் வந்தாரா? அவரைப் பார்க்க வேண்டும்.''

''அவரு வரலீங்களே! பதினைஞ்சு இருபது நாளாச்சு! ஏங்க?''

''ஒண்ணுமில்லே. சும்மா விசாரிக்கத் தான். ஆமாம், இந்தக் காதர் பையன் வந்தானு சமீபத்திலே?''

''காதர் கூட வரலீங்களே! அவனும் சின்ன எசமான் வந்த அன்னிக்குக் காலையிலே வந்தவன்தான். யாரோ ஒரு பொம்பளையைக் கூட்டிக்கிட்டு... அப்புறம் தாஸ் இல்லே... தாஸ்? டிரைவர். அவரும் சின்ன எசமானும் வந்தாங்க....''

இன்ஸ்பெக்டர் செல்வராஜ் புன்னகைத்தார்.

அப்பா அம்மா வியர்வை பெருக்கி, பளபளக்க மனோகரி மண்ணை தோண்டிக் கொண்டே மெதுவாகச் சுனைவரை சென்று விட்டது. நீர் சலசலப்பு இல்லாமல் கண்ணாடி போல இருந்தது. எட்டிப் பார்த்தது. காதரின் முகம் தெரிந்தது. சிரித்தது. காலடியில் கிளறுகையில் ஒருகல் கிடைத்தது. அதை எடுத்தது. அழுக்கான கல்லைத் தன் பாவாடையில் துடைத்தது. அதனுள் பளபள என்று ஏதோ ஜொலித்தது. அம்மாவிடம் கொடுக்கலாமா என்று யோசித்தது. 'சென்ற தடவை கொடுத்தபோது ஏதோ கெட்டது ஆகிவிட்டது. வேண்டாம் வேண்டாம்.' ப்ரொபசர் சர்மாவின் பைப் லைனின் மேல் நின்று கொண்டிருந்த மனோகரி அந்தக் கல்லைத் தூக்கிச் சுனைக்குள் எறிந்தான்.

'ப்ளக்' என்று அந்த இரண்டாவது வைரக் கல் நீரில் விழுந்து மூழ்கியது.

**முற்றும்**

---

'தர்மசங்கடம்'

தம்பு!





10

**ப**ஞ்சரத்தினத்துக்கு அன்று முழுவதும் அதே சிந்தனைதான். அவள் கணவன் இறந்து போகுமுன் எல்லாவற்றையும் ஒழுங்குசெய்து விட்டுத்தான் போயிருந்தார். வீடு, நிலம், ரொக்கம் எல்லாவற்றையும் தமக்குப் பின் தமது ஒரே மகன் ராஜ்குமாருக்குத்தான் என்று எழுதி வைத்துவிட்டுப் போயிருந்தார். ஆனால் பஞ்சரத்தினத்தைப் பரிதவிக்கவிட்டுச் சென்றுவிடவில்லை. அவள் காலம் முடியும் வரை சுகமாக வாழத் தேவையான அளவு கணிசமானதொரு தொகையைப் பாங்கியில் அவள் பெயரில் கட்டிவிட்டிருந்தார். அத்துடன் அந்த வீட்டில் அவளது கடைசி மூச்சு வரை வசிக்க உரிமை உண்டு என்று உயிலில் ஒரு நிபந்தனை விதித்திருந்தார்.

வசிக்க வீடு, செலவழிக்கத் தன்னுடைய தென்று வட்டிப் பணம், கவனித்துக்கொள்ள அன்பான மருமகள் — பீரோ கொள்ளுமட்டும் உடுக்கத் துணி வகைகள் — இத்துடன் அவளுடைய சொத்தான கனமான நகைகள்பல. பணத் தட்டுப்பாட்டைப் பற்றி அவள் ஒரு பொழுதும் கவலைப்பட்டதில்லை. ராஜ்குமானுடைய மனத்தை யாராவது கலவரப் படுத்திவிட்டால்?

இரவு சாப்பாட்டின்போது அவளுக்குப் பிடித்தமான பூசணிக்காய் சாம்பார் கூட வாய்க்குக் கசந்தது.

மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த கவலைகள், திகில்களால் அவளுக்கு உறக்கமே வரவில்லை.

படுக்கையில் பல முறை திரும்பிப் படுத்தாள். சிந்தனைகள் வேகமாக அலைபாய்ந்தன.

கனகசபை திடீரென்று இறந்து போவதற்குச் சில நாட்களுக்கு முன்னர்தான் அந்த மனிதர் வந்திருந்தார்.

அவரை அவள் முன் பின் பார்த்ததில்லை. நல்ல கருத்த முகம். ஆனால் கூர்மையான கண்கள். தேங்காய் சில்லு போன்ற பளிச்சிட்ட பற்கள். கோட்டும் ஸூட்டுமாகத் தடபுடலாக உடை அணிந்தவராகப் பட்டணத்து ஆசாமியாகத்தான் தென்பட்டார். காலில் அணிந்திருந்த பளபளத்த ஷூக்களைக் கழற்றி நடையில் வைத்துவிட்டுத்தான் உள்ளே வந்தார். மரியாதை தெரிந்த மனிதன் என்றுதான் அவள் எண்ணிக்கொண்டாள்.

கனகசபை அப்பொழுதுதான் நிலங்களைச் சுற்றிப் பார்வையிட்டுவிட்டுப் பிரம்பால் பின்னிய சாய்வு நாற்காலியில் தாழ்வாரத்தில் உட்கார்ந்தபடி வெற்றிலைப் பெட்டியைத் திறந்து ஆராய்ந்து கொண்டிருந்தார்.

வெய்யிலில் அலைந்துவிட்டு வந்த களைப்பில் இடையில் வேட்டியும் திறந்த மார்பும் தோளில் துண்டுமாக அவர் சாய்ந்துகொண்டிருந்தார். நெற்றிமீது பட்டையாகத் தரித்திருந்த விபூதி இங்குமங்கும் சிறிதளவு கலைந்து காணப்பட்டது. பின் பக்கம் இலேசாகக் காதைத் தொடங்கிய வழுக்கை வியர்வையில் மின்னியது. ராஜ்குமார் சென்னையில் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தான். வீட்டில் அச்சமயம் அவர்கள் இருவர் மட்டும்தான் இருந்தனர்.

வந்தவர் ஆங்கிலமும் தமிழும் கலந்து பேசியபடி கனகசபையின் கையைப் பிடித்துக் குலுக்கினார்.

''காப்பி கொண்டுவா!'' — கணவன் போட்ட உத்தரவுக்காக உள்ளே சென்றவளுக்கு அவர்கள் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்ற விவரம் ஏதுமே தெரிய வழி இருக்கவில்லை.

காப்பியை வந்தவருக்குக் கொடுத்து உபசரித்த பின்னர், கனகசபை அவரைத் தமது வாயிற்புறத்து அறைக்குள் அழைத்துச் சென்று விட்டார். எத்தனையோ உன்னிப்பாக அவள் கேட்க முயன்றும அவளுக்கு ஏனோ கலவரத்தில் இதயம் வேகமாகத் துடித்துக் கொண்டது. என்னவோ விபரீதம் என்ற வரை உள்ளுணர்வு ஓலமிட்டது.

வாசல் அறையிலிருந்து பேச்சுக் குரல் முதலில் சன்னமாகப் பின்னர் உரத்து... காரமாகக் கேட்டபோது அவள் பாடு நடுநடுங்கிப் போனாள்.

''உங்களால் ஆனதைப் பாருங்கள். அதுக்கெல்லாம் பயந்தவன் நான் இல்லை'' என்று கனகசபை இரைந்து கத்தியதைக் கேட்டதும் அவளுக்கு இருப்பே கொள்ளவில்லை.

---

ஆறுதல் அளிக்க
இன்னொருவரின்
அன்பு இல்லாதபோது,
கண்ணீரின் ஈரம்தான்
ஆறுதல் அளிக்கிறது.

—மு. வரதராசனார்
— ம. தேனப்பன்.

கதவைத் தட்டி உள்ளே சென்று என்ன விஷயம் என்று விசாரித்தால் என்ன? என்று ஓர் எண்ணம்.

அவள் கணவர் மிக்க கோபக்காரர். அவரை மீறி அனுமதியின்றிக் காரியங்கள் ஏதும் செய்தால் கடுங் கோபம் கொண்டு விடுவார். அவரிடம் அவளுக்கு அன்பு என்பதை விடப் பயமே அதிகம் இருந்தது என்றே சொல்ல வேண்டும்.

அற்புதத்தின் வீட்டுக்குப் போய் வந்ததைத் தவிர அவர் உத்தரவின்றி அத்துமீறிய காரியங்கள் எதுவும் அவள் செய்ததேயில்லை. மறுபடியும் அவள் கணவனது உரத்த குரலைக் கேட்டு மெய் பதறி, மேனி நடுங்கி அங்கே நிற்கவும் பயந்து தோட்டத்துப் பக்கம் விரைந்து விட்டாள்.

வெகு நேரத்துக்குப் பின்னர் அவர் அழைப்பதைக் கேட்டு உள்ளே வந்தாள். ''வந்திருக்கிறவருக்கு விருந்து சமைக்கணுமா? சாப்பிட்டுட்டுத்தானே போகப்போறார்?'' கேட்டு வைத்தாள்.

''அவனுக்கு விருந்து ஒரு கேடா? அனுப்பிட்டேன்.'' துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு நாற்காலியில் மறுபடியும் சாய்ந்து கொண்டார். மிடுக்காகக் கலகல பேசினரே யொழிய முகம் பேயறைந்ததைப் போன்று பயங்கரமாக இருந்ததை அவள் கவனிக்கத் தவறவில்லை.

இதற்குப் பின்னர் சில தினங்கள் அவர் சோர்வுடன் காணப்பட்டார். அவரை வாட்டும் கவலை என்ன? தெரிந்துகொள்ள அவள் துடித்தாள். ஆனால் கேட்கத்தான் துணிவு இருக்கவில்லை.

ராஜ்குமார் விடுமுறைக்காக வீட்டுக்கு வருமுன் ஒரு நாள் இரவு அவர் அவளை அழைத்தார். கூடத்தில் தொங்கிய ஊஞ்சல் மீது அவர் உட்கார்ந்திருந்தார். சாப்பாட்டுக்குப் பின் பரபரப்பாக வெற்றிலை போடும் பழக்கமுடையவர். பெட்டியைத் தொடாமல் எங்கேயோ வெறித்தபடி சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

சிறிது நேரம் ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு அசையாது நின்ற அவளை ஏற இறங்கப் பார்த்தார்.

''இப்படி வந்து கிட்ட உட்கார். உன் கிட்டப் பேசணும்.'' உத்தரவிட்டார்.

கோபமா, துயரமா என ஊகிக்க முடியாத கனத்த குரலில் சொன்னார்.

''எனக்கு எதுவும் ஆயிட்டா நீ கஷ்டப் படக்கூடாதுன்னு எல்லாத்தையும் ஒழுங்கு செஞ்சு வைச்சிருக்கேன்.''

''ஏங்க இப்படித் திடுதிப்புன்னு இந்தப் பேச்சு?'' — பதறிப்போனாள் பஞ்சரத்தினம்.

''அட, சும்மா கேளு. நெருப்புன்னு வாய் வெந்து போகாது. இப்ப ஒரு புது சிக்கல் உருவாயிருக்கு. உன்கிட்ட எதுக்கும் சொல்லி வைக்கிறேன். அன்னிக்கி வந்தானே ஒரு பட்டணத்து ஆசாமி... அவன் பெயர் தேவசகாயம். அவன் மறுபடி இங்கே வர மாட்டான். அப்படி எனக்கு வாக்குக் கொடுத்திருக்கான். தேவையான பணத்தைக் கொடுத்து அவன் உன்னை வந்து இம்சிக்கக் கூடாதுன்னு ஒப்புக்க வச்சு அவன் கைப்பட ஒரு கடிதம் எழுதி வாங்கி வச்சிருக்கேன். அத்தோட சில விவரங்களையும் நானே ராஜ்குமாருக்கு விளக்கி எழுதின ஒரு கடிதமும் சேர்த்து இந்தக் காகித உறைக்குள்ளே வைச்சிருக்கேன். எனக்கு ஏதாச்சும் ஆயிட்டா கொஞ்ச நாள் கழிச்சு ராஜ்குமார் கிட்ட நீ இதைக் கொடுத்துப் படிச்சு உன்



மையைத் தெரிஞ்சுக்கச் சொல். பிறகு அவன் இஷ்டப்படி நடக்கலாம்னு சொல்லிடு. செய்வியா?'' உறுமியபடி ஒரு கடித உறையை அவள் கையில் வைத்தார்.

அவள் முகத்தைப் பாராது அவர் மேலே படபடவென்று பேசிக் கொண்டு போனார்.

அற்புத மேரி ஏற்கெனவே சொன்ன தகவல் தான் அது. கணவன் சொல்லக் கேட்கும் போது ஏனோ துக்கம் அவள் நெஞ்சை அடைத்தது. ''இந்தப் பாவி அற்புத மேரி இப்படி ஒரு சிக்கலே வைச்சு நம்மைப் பெரும் தொல்லையில் மாட்டி வைச்சிருப்பாள்னு நான் கனவிலும் நினைக்கவில்லே. சாகும் முன்னாடி சண்டாளி என்னைக் கூப்பிட்டு ஒரு வார்த்தை உண்மையைச் சொல்லிட்டுப் போயிருந்தால்... நான் அன்னிக்கு அந்த மனிதனைக் கண்டு அப்படிப் பதறிப் போயிருக்க மாட்டேன். எதுக்கும் தயாராக இருந்திருப்பேன். இப்போ பேசிப் பயன் என்ன?—அவள் செத்துப் பல வருஷமாச்சே?

குற்ற உணர்வுடன் ஊஞ்சல் பலகையைப் பார்த்தபடி குனிந்து கொண்டிருந்தாள் பஞ்சரத்தினம்.

'அந்திய காலத்தில் அற்புத மேரியைச் சந்தித்து உண்மையைத் தெரிந்துகொண்டு விட்டிருந்தேன். — உங்களிடம் சொல்லாது ஒளித்து விட்டேன்.' என்று கூற அவளுக்கு அத்தனை நெஞ்சழுத்தம் ஏது? கனகசபையின் கடுமையான முகத்தைக் கண்டதுமே கையும் காலும் அவளுக்கு ஓய்ந்து போய் விடுமே?

காய்ந்துபோன தொண்டையை இருமிச் சரிப்படுத்திக் கொண்டாள்.

''அதைப் பத்தி ஏன் கவலைப்படறீங்க? நீங்க சொன்னபடியே இந்த உறையைப் பத்திரமாகப் பாதுகாத்து வைக்கிறேன்; வீணா மனசை அலட்டிக்காதீங்க. ஒருசமயம் உங்களுக்கு முன் நான் போயிட்டா? மஞ்சளும் குங்குமமுமாகப் போகணும்னுதானே ஒரு பெண் ஆசைப்படுவாள்?'' அவள் தொண்டை கரகரத்தது.

''அப்படிப் போயிட்டா உன் பிள்ளை ராஜ்குமாரைக் கண்ணுக்குக்கண்ணா வளர்த்து எல்லாத்தையும் அவனுக்கே கொடுத்துவிட்டுப் போவேன். அவனைப் பத்தி உனக்கு எந்தக் கவலையும் வேண்டாம்.''

''எனக்கு எந்தக் கவலையுமே இல்லீங்க; நீங்க நல்லபடியா வெகு காலம் இருந்து உங்க பேரப்பிள்ளையை எடுத்துக் கொஞ்சி விளையாடணும். அது போதும். ''சொல்லி முடிப்பதற்குள் அவளுக்கு அழுகை வந்து விட்டது.

''சே! சுத்தப் பத்தாம் பசலியா இருக்கியே. எதுக்கு அழுகிறே?...'' அன்புடன் கடிந்து கொண்ட கனகசபை அவளை மெல்லத் தம் அருகே இழுத்துக் கொண்டு முதுகைத் தட்டிச் சமாதானப்படுத்தினார். அவரது பருத்த தோளைத் தழுவிக்கொண்டு துக்கம் தாளாது விக்கி அழத் தொடங்கி விட்டாள்.

''என்னத்துக்கு இந்த அழுகை? இப்ப என்ன ஆயிடுச்சு?'' செல்லமாக அவர் அதட்டினார்.

''ராஜ்குமாருக்கு என் மேலே துளியளவு வெறுப்பு ஏற்பட்டாக்கூட என்னால் தாங்க முடியாதுங்க. பிள்ளை மேலே அத்தனை பாசம் வைச்சிருக்கேனே?'' அவள் பேச முடியாது திணறினாள்.

''தங்கமான பிள்ளை அவன். உன்னைக் கடைசி வரை நல்லாக் கவனிச்சுப்பான். பயப்படாதே.'' ஆறுதல் சொல்லித் தேற்றினார்.

அதற்குப் பின்னர் அவர்கள் ஏதும் அதைப் பற்றிப் பேசவில்லை.

ராஜ்குமார் ஒரு முறை வீடு வந்து சேர்ந்த சில நாட்களுக்குப் பின் ஒரு நாள் காலை வெளியே கிளம்ப உடுத்திக் கொண்டு தயாராக நின்ற கனகசபை பொறுக்க முடியாத நெஞ்சு வலியுடன் ஊஞ்சல் மீது உட்கார்ந்தார்.

'குடிக்கத் தண்ணி' என்று அவர் காட்டிய சைகையைப் புரிந்து கொண்டு தம்ளரில் தண்ணீருடன் பஞ்சரத்தினம் பதற்றமாக ஓடிவந்தாள்.

ஒரு வாய் நீரை விழுங்கிவிட்டு அவர் மெல்லியதாக முறுவலித்தார். ''பஞ்சா! என்னை மன்னிச்சிடு!'' அவள் பதிலுக்கு வாயைத் திறக்கு முன் அவர் பிணமாகச் சாய்ந்து விட்டார்.

வருஷங்கள் பல ஆகியும் அவள் இன்னமும் அந்தக் கடித உறையை மகனிடம் கொடுக்கவில்லை.

குற்ற உணர்வின் அழுத்தம் தாளாது படுக்கையினின்று எழுந்து உட்கார்ந்தாள்



உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டியதை உணர்ந்தாள். அருகே கட்டிலில் மருமகள் அயர்ந்து உறங்கும் அறிகுறியாக மூச்சு சப்தம் ஒழுங்காகக் கேட்டது. மெல்ல நிதானத்தில் சுவரைத் தடவிக் கொண்டு பஞ்சரத்தினம் அறையின் மறு பக்கத்துச் சுவர் ஓரமாக வைக்கப்பட்டிருந்த பீரோவை நெருங்கினாள்.

அந்தக் கடித உறை இனியும் தேவையா? எடுத்துக் கிழித்துப் போட்டு விட்டால்? காலந் தாழ்ந்த பின்னர் மகனுக்கு அந்த விவரம் தெரிந்து என்ன பயன்? வீண் குழப்பம்தானே?

கண் ஆபரேஷன் ஆன பிறகு அவன் வந்ததும் அவனைப் பார்த்து நேரில் அவளாகவே அவனிடம் சொல்லிவிட்டால்? சில சமயம் அகல்யா பீரோவைத் திறக்கிறாளே — அவள் கையில் கடித உறை தட்டுப்பட்டுவிட்டால் ஆபத்தாயிற்றே? அப்பவே அதைக் கிழித்துப் போட்டிருக்க வேண்டும். கணவனது கட்டளையாச்சேன்னு தயங்கிய முட்டாள்தனம் — பலவாறு எண்ணமிட்டபடி அவள் மெதுவாக இடுப்பிலிருந்த சாவிக் கொத்தை எடுத்து ஓசைப்படாது சாவிகளைத் தடவி மெல்ல பீரோ சாவியைத் தனியே பிரித்துப் பூட்டு வாயில் வைத்துத் திருப்பினாள். கதவு திறந்து கொண்டது. சப்தமிடாது திறந்து மூன்றாவது தட்டில் அடுக்கி வைத்திருந்த புடவைகளுக்கிடையே கையை விட்டு மெல்லத் துழாவினாள். 'இதோ அகப்பட்டு விட்டதே..' என்று அவள் ஆனந்தப்பட்டுக் கொண்டு அதை மெல்ல வெளியே இழுக்க முயன்றாள்.

காற்றில் இலை அசைந்தால் கூட போதும், அகல்யா விழித்துக் கொண்டு விடுவாள். அப்படி ஒரு பழக்கம். மெல்லக் கண்களைத் திறந்து படுத்தபடியே அவள் உற்றுப் பார்த்தாள். தூக்கக் கலக்கம் — மங்கிய விடி விளக்கின் ஒளி பீரோ அருகே நின்ற உருவத்தைக் கண்டு ஒரு கணம் அவள் திடுக்கிட்டுப் போனாள். பயத்தில் கூச்சலிட வாயைத் திறந்தவள் கொஞ்சம் நிதானித்தாள்.

அது அத்தை! அந்த வேளையில் ரகசியமாகத் தட்டுத் தடுமாறிக் கொண்டு பீரோவில் என்ன தேடுறாங்க?... ஆவல் தாங்க முடியவில்லை அவளுக்கு.

ஓங்கிப் பலமாக இருமிவிட்டு நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்தாள் அகல்யா.

''அத்தை என்ன வேணும்?''

அதிர்ந்து போனாள் பஞ்சரத்தினம். சட்டென்று பீரோவைப் பூட்டிச் சாவியை இடுப்பில் செருகிக் கொண்டாள்.

''தண்ணிச் செம்பை எங்கே வச்சுருக்கே. தாகமா இருக்கு. எழுப்ப வேணாம்னு நானே தேடிப் பார்த்தேன்.''

அத்தை ஏன் பொய் சொல்றாங்க? பீரோவில் என்னவோ தேடிக் கொண்டிருந்தாங்களே... என்னவாக இருக்கும்?... அகல்யாவுக்கு வியப்புத் தாளமுடியவில்லை.

(தொடரும்)




''ஏன் சார், மிளகாய் மழையில் நனையறதே உள்ளே எடுத்து வைக்கக் கூடாதா?''

''பரவாயில்லே சார். அது 'குடை' மிளகாய்''

●

''உங்க கடிகாரம் உடைஞ்சுடிச்சாமே!''

''ஆமாம்! அதுக்கு நேரம் சரியில்லே''

●

''துணுக்கு எழுத்தாளர் எப்படி பேசினார்?''

'''விட்'டுக் கொடுக்காமல் பேசினார்!''

●

''உங்க படத்துக்கு ஏன் சார் Out door Shooting இல்லே?''

''இது ஒரு 'படி தாண்டா பத்தினியோட'கதை''

●

தம்மிடம் ஆபரேஷன் பண்ணிக் கொள்ள வந்த பேஷண்ட்டிடம் டாக்டர் சொன்னார்:

''சார், உங்களைப் பார்த்தா இறந்து போன என் மாமா ஞாபகம் வருது''

''ஏன் டாக்டர், நான் அவர் மாதிரியே இருக்கேனா?''

''அதற்கில்லே. அவரும் கடைசியாக என்னிடம் தான் ஆபரேஷன் பண்ணிக் கொண்டார்.''

●

''சார், டிபன் பண்ணிட்டுப் போகலாம் வர்றீங்களா?''

''Sorry எனக்குச் சமையல் செய்யத் தெரியாது!''

- மு. செல்வபாண்டியன்



"மபி... ஏன் நீ இன்னும் குழந்தையாவே இருக்கே? என்னிக்கு நீயும் உன் வயசுப் பொண்ணுங்களைப் போல உன்னோட உணர்ச்சிகளைக் கண்ணுலே மட்டுமே வெளிப்படுத்தத் தெரிஞ்சுக்கப் போறே?... பதினாறு வயசுப் பொண்ணுக்குரிய செக்ஸுவல் ஃபீலிங்ஸ் எதுவுமே இல்லாம இருக்கியே... மெட்ராஸிலே உன் வயசுப் பொண்ணுங்களெல்லாம் எப்படி இருக்காங்க தெரியுமா? நீ மட்டும் ஏன் இப்பிடி இருக்கே?... யாரும் உன்னை ஈஸியா ஏமாத்திட முடியுமே மபிம்மா..."

அவனுடைய மனத் தண்டவாளத்தில் நினைவுகள் சத்தமின்றி ஓடின.

சிறிது நேரம் கழித்து மபிதா படுக்க எழுந்து சென்றாள். மதுவும் தூங்கி மாற்றிக் கொண்டு படுத்தான்.

படுத்திருக்கும்போதும் மபிதாவைப் பற்றியே நினைவுகள். நினைவுகளினூடே அவன் தூங்கிப் போனான். மறு நாள் காலை.

மபிதா அவனை உலுக்கிக் கொண்டிருந்தாள். "மக்குச் சித்தப்பா, எழுந்திரேன். இன்னிக்கு என்ன நாள் தெரியுமா? கொஞ்சம்கூட சென்ஸே இல்லே உனக்கு... பாரு. இப்ப என்ன நடக்குதுன்னு. தண்ணியைக் கொண்டு வந்து தலைவழியே விட்டாத்தான் எழுந்திருப்பே நீ..." உடனே மபிதா எழுந்தாள்.

அதுவரை பேசாமல் புரண்டு கொண்டிருந்த மது விருட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

"என்ன விசேஷம்? ஜம்னு குளிச்சு... இனிச்சு.... பர்த்டேயா?"

"ஆமா... ஆனா எனக்கில்லே. உனக்குத்தான். உன் பர்த்டேக்கு நான்தான் குளிச்சிருக்கேன். என்னைக்குத்தான் நீ என்னை மாதிரி ஆகப் போறியோ சுறுசுறுப்பா..." மபிதா அலுத்துக் கொண்டாள்.

மது சிரித்துக் கொண்டே எழுந்தான். காலை ஒன்பது மணி.

மது சேரில் சாய்ந்திருந்தான். மெல்ல ரேடியோவில் இழைந்து வந்த வாணி ஜெயராமின் மதுரக் குரலைக் கண்களை மூடிக் கொண்டு காலால் மெதுவாகத் தரையில் தாளமிட்டபடி ரசித்துக் கொண்டிருந்தான்.

அப்போது மெல்ல அங்கே பூனை போல் சத்தமில்லாமல் வந்த மபிதா மெதுவாக அவன் முகத்துக்கெதிரே குனிந்து அவன் நெற்றியில் சன்னமாக முத்தமிட்டாள்.

மது திடுக்கிட்டவனாய்ச் சட்டென்று கண் விழித்துப் பார்த்தான்.

மபி அவன் எதிரே வந்து நின்று கலகலவெனச் சிரித்தாள்.

"என்ன சித்தப்பா, பயந்துட்டியா... யாரோன்னு? ஹாப்பி பர்த்டே..." சிரிப்பு மாறாமலே அவனுடைய கைகளைப் பற்றிக் குலுக்கினாள்.

மது அந்த நிஷ்களங்கமான முகத்தையும் நிர்மலமான சிரிப்பையும் மலைப்புடன் பார்த்துக்கொண்டே இருந்தான் மௌனமாக.

"என்ன சித்தப்பா அப்பிடிப் பார்க்கறே?" மபி கண்களை அகல விரித்தாள்.

"மபி... இன்னும் நீ குழந்தையாகவே இருக்கியே. எப்ப நீ குமரியாகப் போறே?..." அவன் உதடுகள் முணுமுணுத்தன.

அடுத்த டேர்ம். எகஸாம் எழுதிக்கொண்டிருந்த மதுவிடமிருந்து ஷியாமுக்கு — மபிதாவின் அண்ணாவுக்குக் கடிதம் வந்தது.

"...இந்த அறுபது வயசுக்கு மேல் அப்பா ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு வந்திருக்கிறாராம். என்னை வரச் சொல்லி எழுதியிருந்தார். நான் போகாதது அவருக்குக் கோபம். நான் எப்படி லீவு கேட்பேன்? 'எங்கப்பாவுக்குக் கல்யாணம், நான் போகணும்'னு கேட்க முடியுமா? எனக்கு அண்ணாவையும் மன்னியையும் பார்க்க வெட்கமாக இருக்கு. எனவே இந்த செமஸ்டர் லீவுக்கு அங்கே வரமாட்டேன். விதியேன்னு ஊருக்குப் போகணும். அந்த நரகத்தில் என்னால் தனியாக இருக்க முடியாது. எனவே தயவு செய்து நீ இங்கே வா."

# பெண்மை சிலிர்த்து பொழுது

போட்டிக் கதை: 6

மங்கையர்க்கரசி



கடிதத்தைப் பார்த்து ஷியாம் திகைத்து விட்டான். இந்த மனிதருக்கு இத்தனை வயதுக்கு மேல் ஏன் புத்தி இப்படிப் போக வேண்டும்? என அம்மா விசாரப்பட்டாள்.

இதில் வெட்கப்பட என்ன இருக்கிறது என்று மபிதாவுக்குத் தெரியவில்லை. யோசித்து யோசித்துக் குழம்பிப் போனுள்.

ஒரு மாதம் கழிந்தது. மபிதா பூப்பெய்தினுள். வீட்டில் ஒரே சந்தடியும் ஆர்ப்பாட்டமுமாய் இருந்தது.

அன்றுதான் சடங்கு. மதுவும் வந்திருந்தான். ஆனுல் மபியைப் போய்ப் பார்க்கவில்லை. அவள் இப்போதும் முன்னைப் போலவே அதிக சகஜத்துடன் பழகக் கூடும் என்று எண்ணி விலகியே இருந்து விட்டான்.

சம்பிரதாயச் சடங்குகள் எல்லாம் முடிந்து எல்லோரும் 'ஓதி'க் கொண்டிருந்தார்கள். மதுவுக்குப் பெரிய மனுஷனைப் போல் அங்கே போக என்னவோ ஒரு மாதிரியாக இருந்தது. எனவே எல்லாம் முடிந்து அவள் தனியறையில் மற்றப் பெண்களுடன் இருந்தபோது அவளைப் பார்க்கப் போனுன்.

இவன் போனவுடனேயே, மபி விருட்டென்று எழுந்து ஓடிவந்தாள் அவனிடம்.

''ஏன் சித்தப்பா நீ முன்னமேயே வரலே? எக்லாமெல்லாம் நல்லாப் பண்ணியிருக்கியா? ஏன் இப்பிடி மெலிஞ்சுட்டே? உடம்புக்கு நல்லால்லியா?''

சரமாரியாகக் கேள்விகளைக் கொட்டி அவனை உலுக்கிறாள்.

மது எதுவும் பேசவில்லை. அவனுக்கு ரொம்பச் சங்கடமாக இருந்தது. அவள்மீது கோபம் கூட வந்தது. என்ன பெண் இவள்! கொஞ்சம் கூட வியவஸ்தையே இல்லாமல்! மௌனமாக ஒரு சங்கிலியை எடுத்து அவளிடம் நீட்டினுன்.

மபி ரொம்ப சுவாரசியத்துடன் கழுத்தை நீட்டினுள். ''உம்... போட்டுவிடு.''

மது திடுக்கிட்டு விட்டான். நெருப்பை மிதித்து விட்டவன் போல் சடாரென ஓரடி பின்வாங்கினுன். மன்னி சிவுசிவுத்த முகத்துடன் அவன் காலைத் தன் காலால் அழுத்துவது தெரிந்தது. செயினை மன்னியின் கையில் திணித்து விட்டு விருட்டென வெளியே வந்து விட்டான். அங்கேயிருந்த அத்தனை பேரின் கண்களும் ஒரு கணம் தன் மீது மோதி நின்றதை உணர்ந்து துடிதுடித்துப்போனுன். சே! என்ன காரியம் செய்து விட்டாள் மபி!

அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் மது தன் ஊருக்குக் கிளம்பிப் போய்விட்டான்.

மாலையில் அம்மாவிடம் மபி, 'சித்தப்பா எங்கே? சித்தப்பா எங்கே?' என தொணதொணத்தாள்.

''மபீ....'' அம்மா உரத்துப் போட்ட அரட்டலைக் கேட்டு அப்படியே அடங்கிப் போனுள்.

நான்கு நாட்களாகி விட்டன. அம்மா மபியுடன் பேசவேயில்லை.



## அறிமுக எழுத்தாளர்

நான் குற்றாலம் ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியில் இரண்டாமாண்டு (கணிதம்) படிக்கிறேன். எங்கள் கல்லூரி சுயாட்சி பெற்ற கல்லூரி. நான் கல்லூரி அகாடமிக் கௌன்சிலில் மாணவப் பிரதிநிதிகளில் ஒருத்தி. எங்கள் கல்லூரி நிர்வாகக் குழுவிலும் உறுப்பினர். கல்லூரி பத்திரிகையில் ஸ்டூடண்ட் எடிட்டர். கதை, கவிதைகள் எழுதுவதில் ஆர்வம் அதிகம். என் ஆர்வத்தை வளர்த்தவர்கள் பேராசிரியை இந்திரா பவானியும் மீனாகுமாரியும் ஆவர். நான் பள்ளி இறுதித் தேர்வில் திருநெல்வேலி மாவட்டத்தில், பெண்களில் அதிக மதிப்பெண் தமிழில் பெற்றிருக்கிறேன். — மங்கையர்க்கரசி

மபி வாட்டத்துடன் காணப்பட்டாள். அவளுடைய உயிர்த் தோழியான அனு, மெல்ல அவளிடம் கேட்டாள், ''வாட்ஸ் ராங் வித் யூ மபிம்மா?''

மபிதா பெர்தாக அழுதே விட்டாள். ''அம்மா என்கூடப் பேசவே யில்லே அனு. நாலு நாட்களாகி விட்டது.'' என்று மூக்கைச் சிந்தினாள். ''சித்தப்பாவைப் பத்திப் பேச்செடுத்தாலே 'வள்'ளுன்னு விழறா. ஏன்னே தெரியலே....''

''...அம்மா கோபப்படறதிலேயோ பேசாமல் இருக்கிறதிலேயோ தப்பேயில்லே மபி... ஃபால்ட் பூராவும் உன்னோடதுதான்....'' அனு அமைதியாகச் சொன்னாள்.

''என் மிஸ்டேக்கா?.... வாட் டு யூ மீன்?'' மபி விழித்தாள்.

''மபி, இன்னும் நீ குழந்தை இல்லே. முதல்லே அதைப் புரிஞ்சுக்கோ.'' அனு அவளைத் தட்டிக் கொடுத்தாள்.

''நான் சொல்வதைக் கொஞ்சம் கேள், முன்னே நீ எப்படி இருந்தியோ... லீவ் இட், ஆனா, இனிமே ரொம்பக் கேர்ஃபுல்லா இருக்கணும் மபி. பசங்களோட முன்னே மாதிரி சளசளன்னு வாய் ஓயாமல் பேசக் கூடாது. அவங்களைத் தொட்டுப் பேசறதோ, அடிக்கறதோ கூடவே கூடாது. ஈவன் ஷியாம் கிட்டேகூட அப்படி இருக்கக்கூடாது. சித்தப்பா கூடல்லாம் முன்னே மாதிரி பழகவே கூடாது. அஃப்கோர்ஸ், அவர் உனக்குச் சித்தப்பாதான். ஆனா அவர் ஒரு வயசுப் பையன். என்ஜினியரிங் படிக்கிற காலேஜ் ஸ்டூடண்ட். அவரோட நீ பேசற, பழகற விதங்கள் மத்தவங்களுக்கு வித்தியாசமாப் படக் கூடாது. ஆண்கள் சீக்கிரமே உணர்ச்சி வசப்பட்டுடுவாங்க. அவங்களுக்கு உணர்ச்சியைக் கட்டுப்படுத்தத் தெரியாது. எப்போ அவங்க எப்படி நடந்துக்குவாங்கன்னு நமக்குத் தெரியாது. ஸோ, கேர்ஃபுல்லா இருக்கணும். உன்னை யாரும் ஏமாத்த நீ அலவ் பண்ணக் கூடாது. நம்மைச் சுற்றி இருக்கும் ஆண்கள் தப்புப் பண்ண நாமே காரணமாயிடக் கூடாது. புரிஞ்சுதா? இதை நல்லாத் திங்க் பண்ணு. அன்னிக்குச் சடங்கு வீட்டிலே நீ நடந்துண்ட முறை சரியா, இல்லையான்னு புரியும்.''— அனு முடித்தாள்.

மபி மிகவும் குழம்பிப் போய்விட்டாள்: இந்த அனு என்னென்னவோ பேசறாளே? மபிக்கு எல்லாமே புரிந்த மாதிரியும் இருந்தது; எதுவுமே புரியாதது மாதிரியும் இருந்தது.

அன்றிரவு மபி தனக்குள் அழுது கொண்டிருந்தாள். ''கடவுளே! என்னை உடம்பாலே மட்டும் பெரியவளாக வச்சிருக்காதே. எண்ணத்திலேயும், செயல்களிலேயும் பெரிய மனுஷியாக்கு'' என்று முதன் முறையாகத் தனக்காக வேண்டி அழுதாள்.

தாத்தாவின் நடத்தையில் வெட்கப்பட என்ன இருக்கிறது என்றும், மது என்ன தப்புத் தண்டா பண்ண முடியும் என்றும் அவளுக்கு ஓரளவு புரிந்தது.

மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. ஒரு நாள் கீழே மதுவின் சத்தம் கேட்டது. மாடியில் படித்துக் கொண்டிருந்த மபிக்குக் கால்கள் பரபரத்தன. பேசாமல் இருக்க முயன்று கொண்டிருந்தாள்.

மதுவே மேலே வந்தான்.

''ஹாய்... மபி....'' — அவளருகே வந்தான். மபி அவனைப் பார்த்து மெல்லச் சிரித்தாள்.

''சித்தப்பா பாம்பே எல்லாம் டூர் போயிட்டு வந்திருக்கேன். உனக்கு என்னெல்லாம் வாங்கி வந்திருக்கேன்னு பாரேன்'' என்றபடி மது, ஒரு நாற்காலியை அவளுக்குப் பக்கத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

மபி சட்டென்று தன் நாற்காலியை நாலடி பின்னால் தள்ளிக் கொண்டாள்.

''என்னெல்லாம் வாங்கிட்டு வந்தீங்க சித்தப்பா? காட்டுங்களேன்...'' என்றாள்.

ஆனால் அவளுடைய செய்கையைக் கண்ட மது, செயலிழந்து போனான். மனத்தில் மகிழ்ச்சியும் துயரமும் ஒருங்கே மண்டின. என்னுடைய பழைய இன்னசென்ட் மபியை இழந்து விட்டேனே என்று வருந்தினாலும், நான் எதிர்பார்த்த பெண்ணாக என் மபி மாறிவிட்டாள்; இனி இவளைப் பற்றிப் பயப்பட வேண்டாம். 'நன் கேன் சீட் மை டியரஸ்ட் மபி!' எனச் சந்தோஷப்பட்டான். கலங்கிய கண்களுடன் அவளை ஏறிட்டு நோக்கினான். கண்ணீர் பளபளத்தது. பார்வையை மறைத்தாலும் கூட, அவளுடைய கருவிழியில் தெரிந்த தன்னுடைய சிறிய உருவத்தை அவனால் காண முடிந்தது. அவனுடைய கால்கள் தன்னையறியாமலேயே நாற்காலியைப் பின்னால் தள்ளின.

மபிதாவிடம் உறங்கிக் கிடந்த பெண்மை சிலிர்த்து எழுந்தபோது, அவன் தன்னுடைய ஒரு நல்ல தோழியை இழந்தான்.




"தலைமுறை தலைமுறையாக
மக்கள் பயன்படுத்திவரும்
இந்திய மருந்துகளின்
சக்தியே தனி...

அவற்றுள்
தனிச்சிறப்பு
வாய்ந்தது
அமிர்தாஞ்சன்."

தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தாஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லாவற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.

# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**



AM-2148

# ஸ்வரங்கள்

எம்.ஏ.சுசீலா



"நான் கவிஞனல்ல; ஆனால் நல்ல கவிதைகளின் ரசிகன்" என்ற முன்னுரையோடு ஆறு மாதங்களுக்கு முன்னர் அவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட நாள்... அவள் நெஞ்சில் நிழலாய்ப் பூக்கிறது.

ஆண்கள் கல்லூரியாயிற்றே என்ற அச்ச உணர்வோடும் தயக்கத்தோடும் அந்த இலக்கிய மன்ற விழாவில் கலந்து கொண்ட அவள்... மென்மையான வார்த்தை ஜாலமில்லாத ஒரு கவிதை போன்ற நயத்தோடு காதுகளில் ஒலித்த அவனது சொற்களில் கரைந்து உருகித்தான் போனாள். 'ஷெல்லியின் வசந்தம்' பற்றி அவன் பாடிய ஆங்கிலக் கவிதை அவளது வசந்த காலத்து வாழ்த்துப்பா பாடிற்று. கவிதைகளே உலகமென அன்றுவரை வாழ்ந்திருந்த அவளது மன வீட்டில் புது வாயில்கள் திறப்பு விழாக் கொண்டாடின.

'லைப்ரரி படிக்கட்டுக்களில் அகஸ்மாத்தாய் நிகழ்ந்த சந்திப்புக்கள் அடுத்தடுத்து அவள் கலந்து கொண்ட இலக்கிய நிகழ்ச்சிகளை 'மிஸ்' செய்யாமல் இருப்பதில் அவன் காட்டிய தீவிரம்.... இவையெல்லாம் அவளை அவளுக்கே புரிய வைத்த சம்பவங்களாய்... சரித்திரங்களாய் நீண்டன.

மரங்கள் அடர்ந்த நெடிய சாலைகளின் தனிமைச் சூழலில் 'வாக்' போய்க் கொண்டும், கடற்கரை மணலைக் கை விரல்களால் அளைந்து கொண்டும், பாரதியையும், விட்மனையும், கம்பனையும், காளிதாசனையும் நேரம் போவது தெரியாமல் அலசிக்கொண்டிருப்பது அவர்களுக்குச் சுகமான பொழுது போக்காகிறது. எந்த நிலையிலும் தன்னிடம் கண்ணியக் குறைவாக நடந்து கொள்ளாத தன்னைவிடத் தன் கவிதைகளையே மிகுதியாக நேசிக்கிற — ஒரு கம்பீரமான ஆடவனாக அவன், அவளுக்குள் விசுவரூபம் எடுக்கிறான்.

அன்று மாலை... வானும் கடலும் சங்கமிக்கும் பின்னணியில் அழகுச் சிலையென ஒசிந்து வரும் அவளைத் தூரத்தில் காணும் அந்த விநாடியில்... ஒரு கணம் தடுமாறிப் போகும் அவன், அடுத்த நிமிடம் தன் சிந்தனையை வேறெதிலோ லயிக்க விடுகிறான்.

"என்ன பலமான யோசனை?"

"உன்னோட கவிதைகளைத் தவிர என்னைக் கனவுகளிலே மூழ்கடிக்கிற சக்தி வேறெதுக்கு இருக்கு? நேத்துக் 'காரவானி'லே வந்ததே அந்தக் கவிதையோட பரிமாணங்களைத்தான் இப்போ அசை போட்டுண்டிருக்கேன்."

புறச் சலனங்களால் ஈர்க்கப்பட முடியாத... ஆத்மார்த்தமான அந்த ரசிகனின் 'சின்சியரிட்டி', அவள் அகமன ஆழத்தில் விரவிக் கிடக்கிற கவிதா ஆவேசத்தை முற்றாய்த் தணிக்க... உணர்ச்சி வயப்பட்ட நிலையில் அவன் கரங்களை ஆதரவாய்த் தேடுகிறாள். அவள் விரல்களை மெள்ள நீவியபடி நெகிழ்ந்த குரலில் அவள் காதருகே ஆங்கிலத்தில் முணுமுணுக்கிறான். "எனக்கு மட்டும் ஒரு வாய்ப்புக் கிடைத்தால் கவிதா சாம்ராஜ்யத்தின் செங்கோலை ஏந்த மட்டுமே பிறந்திருக்கும் இந்த விரல்கள், சமையலறையின் சட்டுவங்களைக் கூடத் தீண்டாமல் பார்த்துக் கொள்வேன்."

'இப்படிப்பட்ட ஒரு ரசிகருக்குச் சமைத்துப் போட இந்த விரல்களுக்கல்லவா கொடுத்து வைத்திருக்க வேண்டும்?'

அவள் மனம் மௌனமாக அவனோடு ரகசிய மொழி பேசுகிறது.

கவிதைகளின் சொந்தக்காரி தனக்குச் சொந்தமாகிவிட்ட மகிழ்வில் அவன் பூரித்த அந்த இரவு....

"இன்னிக்கு என்ன கவிதை படிக்கச்சொல்லப் போகிறேள்?"

"இத்தனை நாள் நீ படிச்சுண்டிருந்தே, நான் கேட்டிருந்தேன். இன்னிக்குக் கவிதை படிக்கிறது என்னோட 'டர்ன்!'"

நாணத்தால் கண் புதைக்கும் அந்த நிலையிலும் அவள் கண்கள் அரியதொரு குறட்பாவைப் படைக்கின்றன.

இரவின் மோனத்தில் அவள் உள்ளம் கவிதைத் தவம் புரிய... விரல்கள் தாளிலே வேகமாய் நர்த்தனம் புரிகின்றன. படுக்கையில் சாய்ந்தவாறு ஒரு துப்பறியும் நாவலை மேய்ந்து கொண்டிருக்கும் அவன் கண்களுக்கு முன்னால் கவிதைத் தாள்கள் காற்றில் படபடக்கின்றன. நாவலின் சுவாரசியம் தடைப்பட்ட வேகத்தில் அவன் புருவங்கள் சற்றே உயர..?

---

### நைட் கிளப்புக்கு தமிழ் என்ன?

பாரிஸில் உள்ள இரவு விடுதிகளை
கி.வா.ஜ தனது நூலில்
(கண்டறியாதன கண்டேன்!)
"பழி படு போகம்
விற்பார் ஆவணம்"
என்று குறிப்பிடுகிறார்!

— இனியராஜா

''நீங்க படிச்ச 'அப்ருவ்' பண்ணினப் புறம்தான் எந்த 'மாகஸி'னுக்கு அனுப்பற துன்னு 'டிசைட்' பண்ணப் போறேன். ப்ளீஸ் வில் யூ ஸ்பேர் எ ஃப்யூ மினிட்ஸ்?''

கெஞ்சும் அவள் விழிகளை அவன் பார்வை குறும்பாய் வெறிக்கிறது.

''கண்ணுக்கு முன்னலே நீயே ஒரு கவிதையா நிக்கறச்சே....''

அவளை அணைக்கும் வேகத்தில்....சுசங்கும் தாள்கள் எழுப்பும் ஒலி அவள் மனத்தில் இனம் புரியா வலியை ஏற்படுத்த... அவனுள் அடங்கிப் போகிறுள்.

அன்று வெளியான மாத இதழ், அவள் படைப்பைத் தாங்கி வந்திருக்கிறது. காது புளிக்கும்வரை புகழ் மொழிகளைக் கேட்டு அலுத்தாலும், தன் முதல் ரசிகன் பாரா முகம் அவளை முள்ளாய்க் குத்துகிறது. சுவரைப் பார்த்தபடி படுத்திருக்கும் அவள் தலையணை கண்ணீரால் நனைகிறது. தன் கைகளைப் பற்ற வரும் அவனது பிடிப்பிலிருந்து தன்னை மெதுவாக விடுவித்துக் கொள்கிறுள்.

''என்னுடை ராணிக்கு என்ன கோபம் இன்னிக்கு?''

அணை உடைந்த வெள்ளமாய்த் தன் தாபத்தை அவள் வார்த்தைகளில் கரைக்கிருள்.

''ஓ... மை புவர் கேர்ல்! இதுக்கா இப்படிக் கண்ணை வீங்க அடிச்சிண்டிருக்கே! இன்னிக்கு எங்க 'டிபார்ட்மெண்டிலே' ஏகப்பட்ட 'கன்ஃப்யூஷன்' ஒரே 'டென்ஷ'னிலே இருந்ததனுலே 'கமெண்ட்ஸ்' சொல்ல மறந்து போச்சு! ஏம்மா? நமக்குள்ளே இந்த ஃபார்மாலிட்டீஸ் எல்லாம் இன்னும் அவசியம்தானு? காதலோட மகத்துவத்தை அந்தக் கவிதையிலே அப்படிப் பாடின நீ... இப்போ இதைப் போய் ஒரு பிரச்னையாக்கலாமா?''

...'காதலே நான் எங்கே பாடினேன்? இன்னிக்கு வெளிவந்திருக்கிற கவிதைத் தலைப்பு 'ஸெபரேஷன்'னு?' — சொல்ல வாயெடுத்தவள்.... எதையோ புரிந்துகொண்டவளாய்ச் செயற்கையான வறண்ட புன்னகையொன்றை உதடுகளில் தவழ விடுகிறுள்.

கல்லூரிக்குக் கிளம்பும் அவசரத்தில் அவன் கையில் கனத்த கவரொன்றைத் திணிக்கிருள்.

''காலேஜ் போயிட்டேன்னு அப்புறம் எனக்கு மறந்து போயிடும். 'அட்ரஸ்' எல்லாம் எழுதி வச்சிருக்கேன். நீங்க போற வழியிலே 'போஸ்ட் ஆஃபீஸ்லே' ஸ்டாம்ப் மட்டும் வாங்கி ஒட்டிப் போட்டுடுங்கோ. 'எடிட்டர்' கிட்டே இருந்து ரெண்டு மூணு 'ரிமைண்டர்ஸ்' வந்துடுத்து.''

''ஓகே. ஓகே.''

அவளிடம் விடுபட்டு விட்ட நிம்மதியில் அதை அடியோடு மறந்து போகும் அவன், மறுபடியும் அன்றைய அஞ்சலில் 'எடிட்ட'ரால் நினைவுபடுத்தப் படுகிறுன்.

மாலை நேர இளைப்பாறலுக்குப் பின் இருவரும் ஓய்ந்திருக்கும் வேளையில் மெள்ளப் பேச்செடுக்கிறுன்.

''அன்னிக்கு ஒரு கவர் கொடுத்தேனே... அவசரம்னு 'போஸ்ட்' பண்ண...''

அவள் முடிப்பதற்குள் அவசரம் அவன் குரலிலும், விழிகளிலும் தெறிக்கிறது.

''வர வர நீ ஏன் இப்படி என் மேலே அவநம்பிக்கைப் படறேன்னு எனக்குப் புரியவேயில்லே. பர்ஹேப்ஸ் ஐ மே பீ எ மிஸ் ஃபிட் ஃபார் எ பொயட் லைக் யுவர் செல்ஃப்.''

'இதற்கு இத்தனை கோபம் வர வேண்டிய அவசியமே இல்லையே!' — அவள் நினைத்து முடிப்பதற்குள் அவன் அவசரமாய் எழுந்து போகிறுன். வாசற் கதவு கிரீச்சிடும் ஓசை ...வாழ்க்கைப் பாடலின் சுருதி பேதமாய் அவளுள் ஒலிக்கிறது.

காலைப் பொழுதின் மோகனப் புலர்வில் அவளிடம் மன்னிப்புப் பெறும் பாவனையில் அவன் குரல் குழைகிறது. ''நான் அப்படி நடந்துண்டதற்காக உண்மையிலேயே வெட்கப்படுகிறேன், டியர்! ஏதோ ஒரு 'மூட்'... இதோ பாரு, இன்னும் டைம் இருக்கு. காலம்பறச் சீக்கிரம் எழுந்து எழுதிடு. இன்னிக்கு 'போஸ்ட்'லேயே சேர்த்துடலாம்.''

''அதுக்கு 'ரஃப் காப்பி'கூட நான் வச்சுக்கலியே?''

''உன்னுடை ஞாபக சக்தி அவ்வளவு மோசமாயிருக்கும்னு நான் நினைக்கலே. கம் ஆன்! சியர் அப்.''



உற்சாகத்தோடு ஒரே மூச்சில் எழுதி முடித்தவள் பேப்பர்களை 'ஸ்டாப்ளர்'ல் அடுக்கிய பின் வேலையில் மூழ்கிப் போகிறாள்.

'சிலீர்' என்ற சப்தத்துடன் 'பாட்டில்' என்று உடைந்து சிதறும் ஓசையும், கணவனின் பதற்றக் குரலுமாக 'பாத் ரூமி'லிருக்கும் அவளுக்குள் பரபரப்பூட்ட விரைந்து உடை மாற்றிக் கொண்டு வருகிறாள். அங்கே 'ப்ரில்' இங்கின் அபிஷேகத்தில் அவளது கவிதைக் காவியம் முழுவதுமாய் ஆழ்ந்திருக்க அவனது கரங்களிலும் 'வெயிட் ஷர்ட்', 'பாண்ட்டிலும்' நீலப் பொட்டுச் சிதறல்கள் புள்ளிக்கோலம் இட்டிருக்கின்றன.

''எழுதினதை 'ஃபைலுக்குள்ளே பத்திரமா வைச்சிட்டுப் போகணும்கிறதுகூட இல்லாம அப்படி என்ன 'கேர்லெஸ்னெஸ்' உனக்கு? அவ்வளவு பாடும்னு இப்போ வீணாப் போச்சு? சரி சரி... ஒரு நாள் 'காஷுவல் லீவ்' போட்டுட்டு எழுதி முடி.''

'இனிமேல் எழுத வேண்டியது ஆசிரியருக்கு மன்னிப்புக் கடிதம்தான்' என எண்ணியவாறு கறையைத் துடைக்கத் துணி தேடிப் போகிறாள் அவள்.

அன்று அரசாங்க விடுமுறை. நண்பர்களுடன் 'கிரிக்கெட் மாட்ச்' பார்க்க அவன் போயிருக்கிறான். மாதக் கணக்கில் சேர்ந்து விட்ட பத்திரிகைகள் குவிந்து கிடக்கும் அந்த அலமாரியை ஒழிக்கும் நேரத்திலேதான்... அது அவள் கண்ணில் படுகிறது. அவளால் 'அட்ரஸ்' எழுதப்பட்டுத் தபால் தலை ஒட்டப்படாத, போஸ்ட் செய்யப்படாத அந்தக் கனத்த கவர். நடுங்கும் விரல்களால் அதைப் பிரித்துப் பார்க்கிறாள். பின் மெல்ல எழுந்து கொல்லைக் கிணற்றடியில் அக்கத்தைகளைக் குவியலாக்கிச் சொக்கப்பனை கொளுத்துகிறாள்.

நீலமும் சிவப்புமாய் எரியும் 'ஜ்வாலை'யில் வாழ்வின் நிதரிசனங்கள் அவளுக்குத் தரிசனமாகும் அதே கணத்தில்... அவள் உள்ளச் சுனையில் அபூர்வமான ஊற்றுக் கண் என்றைக்குமாய் அடைபட்டுப் போகிறது!




மனசுக்குள்ளே சிரிக்கலாமே ② 'கமல்'

# தென்கொரியா



தென் கொரியச் சிறுமிகளுடன்
கே. சூரியநாராயணன்

- நம்மூரில் எப்போதாவதுதான் தடையுத்தரவு இருக்கும். கொரியாவில் எப்பொழுதுமே தடையுத்தரவுதான். இரவு 12 மணி முதல் காலை 2 மணிவரை யாருமே தெருவில் நடமாட முடியாது.

- கொரியாவில் தயிர் கிடைக்காது என்று நண்பர்கள் கூறியிருந்தார்கள். எனவே புறப்படும் போது உறை மோர் கொண்டு சென்றிருந்தோம். அதைக் காய்ச்சிய பாலில் கலந்து மறுநாள் காலையில் சாப்பிடுவதற்காக வைத்திருந்தோம். அந்தத் தயிரைச் சாப்பிட முற்பட்டபோது ஹோட்டல் சர்வர்களும் ஹோட்டலில் இருந்தவர்களும் கெட்டுப் போன பாலைச் சாப்பிடக் கூடாது என்று அமர்க்களப்படுத்தி விட்டார்கள். அது கெட்டுப்போன பால் அல்ல தயிர் என்று புரிய வைப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.

- கொரியா நாட்டுப் பாடத் திட்டத்தில் ரிக் வேதமும், ரவீந்திரநாத் தாகூர் பாடல்களும் பெருமளவில் இடம் பெற்றுள்ளன. அந்நாட்டு மாணவ மாணவியர் இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றையும் படித்து வைத்திருக்கின்றனர்.

- தமிழில் நாம் தந்தைக்கு அம்மா அப்பா என்று கூறுகிறோம். கொரியா மக்களும் தாய் தந்தையரை அம்மா, அப்பா என்றுதான் அழைக்கின்றனர்.

பாரத் ஸ்டேட் பாங்க் அதிகாரி திரு கே. சூரிய நாராயணன் கூறியது கேட்டு எழுதியவர்:
ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்






சென்னை டி. டி. கிருஷ்ணமாச்சாரி கம்பெனியில் பணி புரியும் திரு K. S. பலராமன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி கோபு என்ற காமாக்ஷிக்கும் சேனூர் திரு R. கிருஷ்ண மூர்த்தி அவர்களின் குமாரர் சிரஞ்சீவி **ராஜேந்திரன்**, B. Com., க்கும் (E. W. Stevens & Co Pvt Ltd., Madras) சேனூர் கிராமத்தில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அதையொட்டி சென்னையில் நடந்த வரவேற்பிற்கு ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்

வாழ்க மணமக்கள்

கருணைநிறைந்து அகம்புறமும் துளும்பிவழிந்து
உயிர்க்குளெல்லாம் களைகண் ஆகித்

தெருள்நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
கண்உடையோய் சிதையா ஞானப்

பொருள்நிறைந்த மறைஅமுதம் பொழிகின்ற
மலர்வாயோய் பொய்யனேன் தன்

மருள்நிறைந்த மனக்கருங்கல் பாறையும்உள்
கசிந்துஉருக்கும் வடிவத் தோயே

— திருஅருட்பா



# நான் கண்ட ரஷ்யா

அகிலன்

அடுத்தாற்போல் ஒரு சிறிய மர நாற்காலியும் மேசையும் தென்படுகின்றன. மேசையில் அக்டோபர் 17ம் தேதியன்று வெளியான 'பிராவ்டா' பத்திரிகை, ஒரு பழங்காலத்துத் தொலைபேசி, மைக்கூடு, பேனா முதலியவை காட்சி தருகின்றன. அந்த அறையை யொட்டி மரத்தட்டியின் தடுப்புக்குப் பின்னால் ஒரு கட்டில் கிடக்கிறது. அந்த அறைக்குள் இருந்துதான் ஒரு நாளைக்குப் பதினாறு மணி நேரம் அவர் பம்பரமாக உழைத்திருக்கிறார். களைப்பு மிகுதியான போது ஓய்வெடுத்துக்கொள்ள அந்தக் கட்டிலும் படுக்கையும் பயன்பட்டிருக்கின்றன.

அவருடைய அமைச்சரவையின் படம் ஒன்று அங்கே மாட்டப் பட்டிருக்கிறது. முக்கியமானவர்கள் அனைவரும் அமர்ந்திருக்க, ஸ்டாலின் மட்டும் அவரை ஒட்டிப் பின்னால் நின்று கொண்டிருக்கிறார். அன்றைய நிலையில் அவர் இளைஞர். மேலும் அவர் தம் தலைவருக்குப் பின்னால் நெருங்கி நிற்க விரும்பியிருக்கலாம்.

வேலை செய்யும் இடத்துக்கு அருகிலேயே வீடும் இருக்க வேண்டும் என்று லெனின் விரும்பியதால் அதே கட்டிடத்தில் உள்ள மற்றொரு சிறு அறை அவருடைய வீடாகியிருக்கிறது. வீடும் அவருக்கு மற்றொரு அலுவலகம்தான்! மர நாற்காலிக்குப் பதிலாக மெத்தை வைத்த இரு நாற்காலிகளும் ஒரு சோபாவும் கிடக்கின்றன. மரத்தட்டிக்குப் பின்னால் அவருக்கும் அவரது மனைவிக்குமாக இரண்டு கட்டில்கள்.

அவ்வளவு பிரும்மாண்டமான மாளிகையில் லெனின் தன் அலுவலுக்காகவும் குடியிருப்புக்காகவும் தேர்ந்தெடுத்துக்கொண்ட சின்னஞ்சிறு அறைகளைப் பார்த்தபோது என்னால் லெனினையும் காந்தியையும், ஒன்றாக இணைத்துப்பார்க்காமல் இருக்க முடியவில்லை. இருவருடைய போராட்ட அணுகுமுறைகளும் வெவ்வேறாக இருந்தாலும் இருவரும் அப்பழுக்கற்ற தியாக [illegible] மக்கள் நலனுக்காகத் தங்கள் சொந்த வாழ்க்கை நலன்களை முற்றிலும் துறந்தவர்கள். ஆடம்பரத்தையோ சுகபோகத்தையோ அறவே விலக்கிவிட்டு எளியவர்களிலும் எளியவர்களாக வாழ்ந்தவர்கள். வட துருவத்தை ஒட்டியுள்ள அந்தக் குளிர் மிகுந்த நகரத்தில் லெனினால் அதைவிட எளிமையாக வாழ்ந்திருக்க முடியாது.

தமக்கு அதிகமான ரொட்டித் துண்டுகள் தந்த பணியாளனிடம், ''நாட்டில் மக்கள் பஞ்சத்தால் வாடும்போது எனக்கு மட்டும் அதிகமாய்த் தருவது தவறு'' என்று கண்டித்தவர் லெனின். விலையுயர்ந்த ரொட்டி கொடுத்தபோது, ''இதைச் சாப்பிடும் தகுதி எனக்கில்லை'' என்று சொல்லி அதை ஒரு குழந்தையிடம் கொடுத்தவர் காந்தி. கடுமையான எளிமையைத் தங்கள் வாழ்வில் கடைப்பிடித்த இந்த இருவரையும் ஒன்றாக அப்போது நினைத்துக் கொண்டேன். தலைவர்கள் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர்கள் இவர்கள்.

புரட்சிச் சங்கை முதலில் முழங்கி புரட்சியாளர்களுக்கு அழைப்பு விடுத்த 'அரோரா' என்னும் பீரங்கிக் கப்பலும் அருகில்தான் நீவா நதியில் இன்னும் நங்கூரம் பாய்ச்சி மிதந்து கொண்டிருக்கிறது. அதிலிருந்து வெடித்த பீரங்கிச் சத்தத்தைக் கேட்டவுடன்தான் அக்டோபர் புரட்சி தொடங்கப்பெற்றது. அக்காலத்து ஆட்சி பீடத்தின் தலைமையகமான குளிர்கால அரண்மனை தாக்கப்பெற்றது.

நண்பர்களும் நானும் 'அரோரா' கப்பலுக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். ஏற்கெனவே அங்கு பெருந் திரளான கூட்டம் வந்து போய்க் கொண்டிருந்தது. கப்பலின்

✕ லெனின் தங்கியிருந்து புரட்சியைத் தலைமை தாங்கி நடத்திய கட்டிடம் ஸ்மோல்னி.

தலைவர் எங்களுக்கு விவரங்களைக் கூறினார். 14 பெரிய பீரங்கிகளைக் கொண்ட அந்தக் கப்பல் 1903ல் கட்டப்பெற்றது. 1904—5ல் நடைபெற்ற ருஷ்ய — ஜப்பான் போரில் பங்கு கொண்டது. புரட்சியின்போது அந்தக் கப்பலில் 570 பேர் பணியாற்றினார்கள். அவர்கள் எல்லோருமே புரட்சியில் கலந்து கொண்டார்கள். அவர்களில் 17 பேர் இன்னும் உயிரோடிருக்கிறார்கள்.

கப்பலைச் சுற்றிப் பார்த்தோம். அந்தக் காலத்துக்கு அது மிகப் பெரிய பீரங்கிக் கப்பலாக இருந்திருக்க வேண்டும். இரு புறங்களிலும் பெரிய பெரிய பீரங்கிகள்.

✕ 1917 அக்டோபர் புரட்சியின் போது முதல் குண்டு வெடித்துப் புரட்சியைத் துவக்கி வைத்த பீரங்கிக் கப்பல் அரோரா.



முதல் உலகப் போரில் அது பால்டிக் கடலிலிருந்து போரிட்டிருக்கிறது. இரண்டாவது உலகப் போரில் நீவா நதியில் மிதந்தபடி ஹிட்லரின் படைகளைத் தாக்கியிருக்கிறது. லெனின்கிராட் நகரைக் காவல் காத்திருக்கிறது. — இப்போது, அது புரட்சியுடன் தொடர்பு கொண்ட கண்காட்சிகளில் ஒன்றாக விளங்குகிறது.

'அரோரா'வைப் பார்த்து விட்டு, 'சமாதான நட்புறவு மாளிகையில்' எங்களுக்காக ஏற்பாடு செய்திருந்த விருந்துக்கு வந்தோம். இந்தியாவைப் பற்றி நன்கு அறிந்திருந்த சில அறிஞர்களும் பேராசிரியர்களும் விருந்தில் கலந்து கொண்டார்கள். விருந்து முடிந்தவுடன் அந்த மாளிகையைச் சுற்றிப் பார்த்தேன்.

அங்கிருந்த பல்வேறு விசாலமான கூடங்களில் ஒரே சமயத்தில் பல கருத்தரங்குகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. வெளி நாட்டுப் பிரதிநிதிகளும் உள்நாட்டுப் பிரதிநிதிகளும் கலந்து கொண்ட அந்த அரங்குகளில் பேசப்பட்ட கருத்துக்கள் லெனின் கொள்கைகள் பற்றிய கருத்துக்கள்; அவற்றின் வாயிலாக எவ்வாறு உலகில் சமாதானத்தையும் நட்புறவையும் வளர்ப்பது என்பது பற்றிய விவாதங்கள்.

இவ்வாறு, லெனின்கிராடில் மட்டுமல்லாமல், சோவியத் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும், அந்த நாட்டின் அகத்திலும் புறத்திலும் — லெனின் நீக்கமற நிறைந்து உயிர் வாழ்கிறார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## 9. மொழி, பத்திரிக்கை, எழுத்தாளர்

இருபத்தாறு கோடி மக்கள் வாழும் சோவியத்நாட்டில் நூற்றுமுப்பது மொழிகள் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வருகின்றன. சட்டப்படி எல்லா மொழிகளுமே பள்ளிகள், கல்லூரிகள், அரசாங்க அலுவலகங்கள், நீதிமன்றங்கள் முதலியவற்றில் பயன்படுத்தப்படுவதற்குச் சம உரிமை பெற்றவை. சோவியத் நாட்டில் எந்த ஒரு மொழியும் அரசாங்க மொழியாக ஆக்கப்படவில்லை. 50 சதவிகித மக்களுக்கு மேல் பதினொன்று கோடியேஇருபது லட்சம் மக்கள், ரஷ்ய மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். அப்படியிருந்தும் கூட அங்கு ரஷ்ய மொழி ஆட்சி மொழியாக்கப்படவில்லை.

இந்த நிலையில் எப்படித் தங்கள் மொழிப் பிரச்னையைச் சமாளித்து அவர்கள் ஒன்றுபட்டு நிற்கிறார்கள்? இதை நான் தெரிந்து கொள்ள முயன்றேன். அவர்களுடைய ராஜ தந்திரம் நிறைந்த இங்கிதமான அணுகு முறை என்னை வியப்படையச் செய்தது.

பதினைந்து சுயாட்சித் தன்மையுள்ள குடியரசுகளையும் மற்றும் பல சுயாட்சிப் பகுதிகளையும் தன்னகத்தே கொண்ட கூட்டுக் குடும்பம் சோவியத் யூனியன். அந்தந்தக் குடியரசில் வாழும் மக்களில் பெரும்பான்மையோருக்கு எது தாய்





மொழியோ அதுதான் அந்தக் குடியரசின் ஆட்சி மொழி. பாட மொழியும் நீதிமன்ற மொழியும் கூட அதுதான். இவ்வாறு சுமார் 75 முக்கியமான மொழிகளை விட்டால், மற்றவை மிகவும் சிறுபான்மையினருடைய தாய்மொழிகள்.

ஒவ்வொரு குடியரசிலும் அந்தந்த மொழிகளிலேயே கல்வி கற்பிக்கும் பள்ளிகள் ஏராளமாக உள்ளன. மேற் கல்வி முடியும்வரை ஒருவர் தம் தாய் மொழியிலேயே கற்கலாம். மேல் வகுப்பு மாணவர்களுக்கு ரஷ்ய மொழியும் இலக்கியமும் விருப்பப் பாடமாகக் கற்க வாய்ப்பளிக்கப்படுகிறது. அதைப் போலவே எல்லாக் குடியரசுகளிலும் ரஷ்ய மொழி வாயிலாகக் கல்வி கற்பிக்கும் தேசியப் பள்ளிகளும் இயங்குகின்றன. அந்த ரஷ்யப் பள்ளிகளிலும் கூட, அவை எந்த எந்தக் குடியரசில் இயங்குகின்றனவோ அந்தந்தக் குடியரசின் தாய் மொழியும் இலக்கியமும் கட்டாயப் பாடம்.

எந்தப் பள்ளிக்குத் தம் குழந்தைகளை அனுப்புவது என்பது பற்றிப் பெற்றோர் முடிவு செய்து கொள்ளுகிறார்கள். இந்த ஏற்பாட்டினால் ரஷ்யாவில் வாழும் பெரும்பாலான மக்கள் தங்கள் தாய் மொழிக்கு அடுத்த மொழியாக ரஷ்ய மொழியை நன்கு தெரிந்து வைத்திருக்கிறார்கள். அவ்வாறே நாட்டின் பல பகுதிகளில் வாழும் ரஷ்ய மக்களும் அந்தந்தப் பகுதி மக்களின் மொழிகளைப் பேசவும் எழுதவும் தெரிந்து வைத்திருக்கிறார்கள். மேலும் ரோமன் எழுத்துக்களையே அவர்கள் எல்லா மொழிகளுக்கும் பயன்படுத்தி வருவதால் மொழிகளைக் கற்றுக் கொள்வதில் அவர்களுக்கு மிகுந்த சிரமம் ஏற்படுவதில்லை.

தவிரவும் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய மேல் நாட்டு மொழிகளும் இந்திய-சீன — தென்கிழக்காசிய — ஆப்பிரிக்க மொழிகளும் கற்றுக் கொள்ள விரும்புவோருக்கு மாஸ்கோ — லெனின்கிராட் பல்கலைக் கழகங்களில் தனிப்பட்ட வசதிகளும் செய்து கொடுக்கப்படுகின்றன. மொழிக் கல்விக்காகவும் தொழிற் கல்விக்காகவும் ரஷ்யா நன்கு திட்டமிட்டு ஏராளமாகச் செலவு செய்து வருகிறது.

ரஷ்ய மொழி அங்கு ஆட்சி மொழியாக இல்லாவிட்டாலும் கூட, அது அங்குள்ள பெரும்பாலோருக்கு இரண்டாவது தாய் மொழியாகி விட்டது. அவ்வாறே ரஷ்ய மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களில் பலரும் நாட்டின் பிற மொழிகளை நன்கு கற்று வைத்திருக்கிறார்கள். இத்தகைய பரஸ்பர இணக்கத்தால் அங்கு மொழி என்பது ஒரு பிரச்சினைக்குரிய தடையாக யாராலும் கருதப்படுவதில்லை. மேலும் நாட்டின் பிற பகுதிகளில் படைக்கப்பட்ட—படைக்கப்படும் இலக்கியங்களில் முக்கியமானவையெல்லாம் ரஷ்யனில் மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன. ஆகவே உண்மையாகவே ஒரு தேசிய மொழி என்ற தகுதியையும் வளத்தையும் அது தேடிக்கொண்டு விட்டது. நாட்டின் ஒருமைப்பாட்டு வளர்ச்சிக்கு இந்த மொழிபெயர்ப்புத் திட்டம் அங்கு பெருந்துணை செய்து வருகிறது.

## பத்திரிகைகள்

தினசரிப் பத்திரிகைகள் முதல், வார—மாத—இதழ்கள் வரை பல பத்திரிகைகளைப் பார்த்தேன். அவற்றில் வெளியிடப்படும் விஷயங்களைப் பற்றி விசாரித்தேன். எல்லாப் பத்திரிகைகளிலும் ஒன்று மட்டும் நன்கு புலப்பட்டது. இளம் பெண்களின் உருவங்களை அநாகரிகமான தோற்றங்களில் அட்டைப் படங்களாக வெளியிடும் ஆபாசப் போக்கு அங்கு எந்தப் பத்திரிகையிலும் காணப்படவில்லை. உள்ளே வெளியிடப்பட்டிருந்த படங்களிலும் ஆண் — பெண் சதை வெறியைத் தூண்டும் விவகாரங்கள் சித்திரிக்கப்படவில்லை. வேதம், சாஸ்திரம், கோயில், குளம், சாமியார் என்று ஒரு பக்கத்திலும், முடை நாற்றமெடுக்கும் சதை விஷேதங்கள் மறு பக்கத்திலும் அங்கு பிரசுரிக்கப்படுவதில்லை.

இளைஞர்களுக்காக வெளியிடப்படும் தினசரியான 'பிராவ்டா'வில் வந்துள்ள செய்திகளைப் பற்றிக் கேட்டேன். முதல் இரண்டு பக்கங்களில் அரசியல், பொருளாதாரம், தொழில், விஞ்ஞானம் முதலியன பற்றிய செய்திகள் வந்திருந்தன' அடுத்த இரண்டு பக்கங்களில் கவிதைகள், கலை நிகழ்ச்சிகள் பற்றிய விமரிசனங்கள், ஒரு நாவலாசிரியரின் பேட்டி என்று இலக்கிய — கலாசார—பண்பாட்டுத் தகவல்கள் வந்திருந்தன

அரசியலையும் சினிமாவையும் விட்டால், நாட்டில் செய்திகளுக்கு வேறொன்றுமில்லை என்ற அவல நிலை ரஷ்யப் பத்திரிகைகளில் கிடையாது. இலக்கியக் கூட்டங்கள், கவியரங்குகள், கலை நிகழ்ச்சிகள், மற்றும் பல்வேறு துறையினர் புரிந்துள்ள சாதனைகள் போன்றவையெல்லாம் செய்திப் பத்திரிகைகளில் முக்கியமான இடங்களைப் பெறுகின்றன.

ஸ்டாலின் காலத்தில் கருத்து வேறுபாடுகளைப் பத்திரிகைகளிலோ புத்தகங்களிலோ வெளியிடுவதற்கு வாய்ப்புக்கள் இருக்கவில்லை. குருஷேவ் பொறுப்பேற்ற பிறகு




அந்நகைய கட்டுப்பாடுகள் சிறிது சிறிதாகத் தளர்த்தப்பட்டு விட்டன. பத்திரிகையாளர், எழுத்தாளர், வாசகர் ஆகியோர் வாழ்க்கையைப் பாதிக்கும் பல்வேறு அம்சங்களைப் பற்றியும் தங்கள் கருத்துக்களைத் துணிச்சலோடு எழுதி வருகிறார்கள். நீதிமன்றத்தில் வழங்கிய தீர்ப்புப் பற்றியும் சட்டத்தில் உள்ள குறைபாடு குறித்தும் கூட அண்மையில் ஒரு பத்திரிகையில் பரபரப்பான விவாதம் நடைபெற்றது. நிர்வாகங்களில் உள்ள குறைபாடுகளும் தவறுகளும் பொறுப்போடு விமர்சிக்கப்படுகின்றன. இந்த விமர்சனங்கள் பரிசீலிக்கப்பட்டு மக்களுடைய குறைகளைத் தீர்க்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

விவாதத்துக்கு அப்பாற்பட்டது ஒன்றே ஒன்றுதான். ''இந்த நாட்டுக்குப் பொதுவுடைமைத் தத்துவம் தேவையா?'' என்பதை மட்டும் யாரும் சர்ச்சைக்குரிய பிரச்னையாக்கிவிடக் கூடாது. ஏனெனில் அந்தத் தத்துவம்தான் அந்த நாட்டு மக்களுக்குச் சம வாய்ப்பை அளித்து, அவர்களுக்குப் புது வாழ்வைத் தந்திருக்கிறது என்று நம்புகிறார்கள். உலகத்தின் மாபெரும் வல்லரசுகளில் ஒன்றாக அதை வளர்த்து விட்டது மட்டுமின்றி, அதன் எல்லா மக்களையும் பசி – பட்டினி – வறுமை – நோய்– எழுத்தறிவின்மை – வேலையில்லாத் திண்டாட்டம் முதலிய கொடுமைகளிலிருந்து அது விடுவித்திருக்கிறது. ஆகவே, அந்தத் தத்துவம் காலத்தின் தேவைகளுக்கேற்பச் செயல்படுத்தப்படுகிறதா என்பதை அவர்கள் ஆராய்கிறார்களே தவிர, தத்துவத்தின் அடிப்படையை அசைக்க யாரும் அங்கு அனுமதிக்கப்படுவதில்லை.

## எழுத்தாளர்கள்

ஒவ்வொரு குடியரசின் தலைநகரிலும் அந்தந்த மொழியில் எழுதும் எழுத்தாளர்களைக் கொண்ட எழுத்தாளர் யூனியன் இருக்கிறது. மொத்தம் 75 மொழிகளில் எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். இவர்கள் அனைவரும் சேர்ந்து சோவியத் எழுத்தாளர் யூனியன் என்ற மத்திய அமைப்போடு இணைந்து செயல்படுகின்றனர். ரஷ்யன், கஸாக், உஸ்பெக், ஆர்மேனியன், ஜார்ஜியன் ஆகிய வெவ்வேறு மொழி எழுத்தாளர்களை நான் சந்தித்திருக்கிறேன். அவர்களோடு கலந்து பழகியிருக்கிறேன். முன்பு இரு முறை சென்றபோதும் எழுத்தாளர்களின் விருந்தினராகத்தான் நான் சென்று வந்தேன். இம்முறை பத்திரிகை நிறுவனத்தின் அழைப்பின் பேரில் சென்றாலும், என் விருப்பத்துக்கு இணங்க, ரஷ்ய மொழியில் எழுதும் லெனின்கிராட் எழுத்தாளர்களையும் ஜார்ஜிய மொழி எழுத்தாளர்களையும் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

இந்த ஆண்டு ஜூன் 25ம் தேதி நானும் என்னுடன் வந்த இந்திய எழுத்தாளர்களும் எழுத்தாளர் யூனியன் அலுவலகத்தில் லெனின்கிராட் எழுத்தாளர்கள் சிலரைச் சந்தித்தோம். நானூறு பேர்களை உறுப்பினர்களாகக் கொண்ட மிகப் பெரிய எழுத்தாளர் சங்கங்களில் ஒன்று அது. ஆம், எழுத்தாளர்கள் நானூறு பேர்களைக்கொண்ட சங்கம் என்றால் அது உண்மையிலேயே அங்கு மிகப் பெரிய சங்கம்தான். அதில் உறுப்பினர்களாக உள்ள நானூறு பேர்களுமே முழு நேர எழுத்தாளர்கள். எழுத விரும்புவோரெல்லாம் எழுத்துப் பயிற்சி பெறும் நிலையில் இருப்பவர்கள் எல்லாம், எளிதில் உறுப்பினர்களாகி விட முடியாது. நன்கு தேர்ச்சி பெற்று எழுத்துலகில் தங்கள் பெயர்களை நிலைநாட்டிக் கொண்டவர்களே உறுப்பினர்களாகிறார்கள். சிறுகதை, நாவல், கட்டுரை, நாடகம், கவிதை, திறனாய்வு முதலிய பல்வேறு துறைகளைச் சேர்ந்தவர்களும் அதில் இருக்கிறார்கள்.

அந்த எழுத்தாளர் யூனியன் லெனின்கிராட் எழுத்தாளர்களுடைய நூல்களை வெளியிடும் பொறுப்பை மேற்கொண்டிருக்கிறது. நான்கு இலக்கியப் பத்திரிகைகளுடன் அதற்குத் தொடர்பு இருக்கிறது. பல்வேறு வயதுப் பிரிவைச் சேர்ந்த சிறுவர் சிறுமியர்க்குப் பத்திரிகைகளை வெளியிடுவதும் புத்தகங்களை வெளியிடுவதும் கூட அதனுடைய வேலைகள். ஆண்டுக்குச் சுமார் 500 நூல்கள் சிறுவர்களுக்கெனப் பதிப்பிக்கப் படுகின்றன. சுகர்னேவ் என்ற ஒரு குழந்தை எழுத்தாளரை ஆசிரியராகக் கொண்ட 'அரோரா' என்ற மாதப் பத்திரிகை ஏழு லட்சம் பிரதிகள் விற்பனை ஆகின்றன. (தொடரும்

# சிதறிப்போன கனவுச் சுமைகள்



ராகவன் பிஸியாகப் புறப்பட்டுக் கொண்டிருந்தான் பயணத்துக்கு. அவனுக்கு கூடமாட உதவி செய்து கொண்டிருந்தாள் அவன் அம்மா.

''ராகவா... ஒடம்புக்கு நல்லா இருந்தா நானும்தான் வந்திருப்பேன். நா...அவரு கூடப் பொறக்காட்டியும், எம் மேலே எவ்வளவு பிரியம் தெரியுமா? விசுவோட அப்பாவுக்கு.... அந்தக் காலத்திலே....''

''யம்மா....யம்மோவ் எனக்கு நல்லாத் தெரியும். வேணும்னுத் திருப்பிச் சொல்லட்டுமா? இதோட இதை நீ எத்தினியோ தடவை சொல்லியாச்சு...''

சிரிப்புடன் குறுக்கிட்டுச் சொன்னான் ராகவன்.

''கேமராவை எடுத்துக்கிட்டயாடா.?''

''ஓ... எஸ்.''

அந்தக் கேமராவை எடுத்துத் துடைத்துக் கொண்டான். அது ஒரு பழைய பாணி, பாக்ஸ் கேமரா. ஏதோ லொட லொடவென்று அதை ஆட்டினால் ஒரு விதமான சத்தம் எழும்பினாலும், படம் என்னவோ துல்லியமாக இருக்கும். யாரும், காமிராவையும், அதால் எடுக்கப்பட்ட படங்களையும் பார்த்தால் நம்பக்கூட மாட்டார்கள். இதில் இன்னொரு விசித்திரம். ஏதோ சத்தியத்துக்குக் கட்டுப்பட்டது போல் ராகவன் எடுத்தால் மட்டுமேதான் படம் உருப்படியாக இருக்கும். வேறு யார் எடுத்தாலும் 'ஷேக்' தான்.

கற்பனையும் கனவுமாகத் தன் கேமராவை பிரியத்துடன் பார்த்தான் ராகவன். அவன் மனக் கண்ணில் ஒரு காட்சி பளிச்சிட்டது.

'விசு மாப்பிள்ளைக் கோலத்தில் 'ஜம்'மென்று நிற்கிறான். காமிராவை இப்படியும் அப்படியுமாக அட்ஜஸ்ட் செய்துகொண்டு அவன் எடுப்பதைப் பார்த்துவிட்டு வாய் விட்டுச் சிரிக்கிறான் விசு. கூட நிற்பவளிடமும் சொல்கிறான். அவளும் புன்னகைக்க... 'க்ளிக்'கென்று இந்தக் காட்சியையும் காமிராவுக்குள் அடக்கிக் கொண்டு, திருப்தியுடன், சந்தோஷமான மன நிறைவுடன்...'

....'இது யாராம்...?' 'தெரியலே. மாப்பிள்ளையோட பெஸ்ட் ப்ரண்டாம்... ஒருவகையிலே சொந்தம் கூட ஆகணுமாம்...'

விசுவின் தங்கை விமலா வந்து அவனைப் பார்த்துப் புன்னகைக்கிறாள். தன் தோழிகளோடு ஒரு ஸ்நேப் எடுக்க முடியுமா என்று கேட்கிறாள்....'

''டேய் ராகவா... என்ன கேமராவைக் கையிலே வெச்சுட்டு என்னடா அப்பிடிப் பார்த்துட்டு இருக்கே? ரிப்பேரா?''

வியப்புடன் ஒலித்த அம்மாவின் குரலால் சட்டென்று தன் கனவுலகிலிருந்து மீண்டு வந்தான்.

''இல்லேயம்மா... அதெல்லாம் ஒன்னுமில்லே... நல்லாத்தான் இருக்கு...''

மலர்ந்து, மறைந்த கனவுகள் அவன் மனத்தில் இதமாய் இனித்தன.

''ராகவா... விமலாவை உனக்கு ஞாபகமிருக்காடா?''

'ஞாபகமா...' மனத்துக்குள் சிரித்துக் கொண்டான். அவளைப் பார்த்து வருடங்களானாலும் மறந்து விட முடியுமா? என்ன?'

''ஏம்மா... எதுக்குக் கேக்கறே?''

''அவளை நல்லாப் பார்த்துட்டு வாயேன். அவளைத்தான் உனக்குப் பண்ணி வைக்கலாம்னு ஒரு யோசனை... சொந்தம் விட்டுப் போகக் கூடாது, இல்லேயா... அதான்... என்ன நான் சொல்றது?''

''போம்மா... உனக்கு வேறே வேலேயே இல்லே...'' என்று பொய்க் கோபத்துடன் கத்திவிட்டுச் சிரித்தான் ராகவன்.

**வா**ழை மரங்களும் தோரணங்களுமாய் இருந்த இந்தப் பெரிய வீட்டைப் பார்த்த வுடன் பிரமித்துப் போனான். ஒருவேளை விலாசம் மாறி வந்து விட்டோமோ என்று கூட அவனுக்குத் தோன்றியது. அவனால் நம்பவே முடியவில்லே. ஆறு வருட இடைவெளியில் இவ்வளவு பெரிய பிரம்மாண்டமான மாற்றங்களாக முன்னேற்றங்களாக....

சாதாரண மங்களூர் ஓட்டு வீடாக இருந்தது இப்பொழுது சின்னப் பங்களாவாக, அழகிய புல்வெளியோடு, மரங்களோடு...ஓ!

ரொம்பவும் அந்நியமாய் உணர்ந்தான், ராகவன்.

எந்த வித மாற்றங்களுமின்றி ஆறு வருடங்களுக்கு முன்பிருந்த அதே புகை பிடித்த வீட்டில், சிறிதும் மாற்றமில்லாத அதே மாறாத சூழ்நிலேயில் தான் இருக்கும்பொழுது 'விசு' வீட்டில்தான் எவ்வளவு மாற்றங்கள்! அப்போது தனக்குச் சமமாகத் தெரிந்த விசு இப்போது சட்டென்று ரொம்பவும் உயர்ந்து விட்டதைப் போலிருந்தது அவனுக்கு.

விசுவைத் தவிர மற்றவர்களால் இப்பொழுது அவனை அடையாளம் கண்டு கொள்ள முடியுமா என்று கூடச் சந்தேகப்பட்டான் ராகவன்.

''இத்தனை நாட்கள் இப்படி நெருக்கமாகப் பழகியும்கூட விசு இந்த மாற்றங்களைப் பற்றிச் சொல்லாததில் விசுவின் மேல் கோபமாகக் கூட வந்தது அவனுக்கு. ஒன்றிரண்டு முறை வீடு

## 'கார்த்திகா ராஜ்குமார்'



# மனசுக்குள்ளே சிரிக்கலாமே (5)




வாங்கியது பற்றி மற்ற விஷயங்கள் பற்றி மேலோட்டமாக அவன் சொல்லியிருந்த பொழுது இப்படி பிரமிக்க வைக்கும் விதத்தில் இருக்கும் என்று ராகவன் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை.

தயங்கியபடி உள்ளே நடந்தான் ராகவன்.

''யார் வேணும் உங்களுக்கு?''

சட்டென்று திரும்பிப் பார்த்தான். 'டீன் ஏஜில் தாவணியுடன் விமலாவோ? அதே நீண்ட மெல்லிய மூக்கு... இடது கன்னத்தில் மச்சம். அட விமலாவேதான்! இனிய அதிர்ச்சியாக இருந்தது அவனுக்கு. எப்படி அழகாக மாறிவிட்டாள்!

''விமலா... என்னைத் தெரியலே? நான்தான் ராகவன். பவானியிலேயிருந்து வந்திருக்கிறேன்...'' பரபரப்பும் எதிர்பார்ப்புமாய்ச் சொன்னான்.

''ஓ... அப்படியா... எனக்குத் தெரியலே. வாங்க... உள்ளே வாங்க'' என்றபடி நடந்தாள் விமலா.

தன்னைக் கண்டதும், தன் பெயரைக் கேட்டதும், அவள் முகம் சிவக்க, மலர்ந்து போவாள்... அப்படி, இப்படி என்று கற்பனை செய்து கொண்டிருந்தவன், இப்போது ஏமாந்து போய், அதன் கசப்பை மெல்ல ஜீரணிக்க முயன்றபடியே அவள் பின் நடந்தான்.

உள்ளே போய்க் காத்திருந்த சிறிது நேரத்தில் விக வந்து ''ஏய் ராகவா! வந்துட்டியா...'' என்றபடி அன்புடன் கட்டிக் கொள்ள அவன் அணைப்பு நொந்து போயிருந்த அவன் மனத்துக்கு இதமாக இருந்தது. ஆனாலும்....

எதுவுமே சரியென்று தோன்றவில்லை. நேர் எதிரான உணர்வுகளின் மோதல்களில் தவித்துப்போனான் ராகவன். மன உளைச்சலில் மாடியில் விகவின் அறைக்கு வெளியில், மொட்டை மாடியில் வந்து நின்றான்.

வெளியில் திருமண ஏற்பாடுகள் வெகு ஜரூராக நடந்து கொண்டிருந்தன. தோரணங்களைச் சிலபேர் கட்டிக் கொண்டிருக்க, சிலபேர் மரங்களில் சீரியல் பல்புகளைத் தொங்கவிட்டு மின் தொடர்பு கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இப்படித் தெரிந்த காட்சியில் மனத்தைச் செலுத்தியபடி இருந்தவன் சட்டென்று அந்தக் காட்சியைக் கவனித்ததும் திகைத்துப் போனான்.

சற்றுத் தூரத்தில் அந்தத் தோட்டத்தின் ஓரமாக இருந்த வேப்ப மரத்துக்குக் கீழ் யாரோ ஒருவனுடன் நின்று கொண்டு முகம் சிவக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டிருந்தாள் விமலா. அவனும் விமலாவுடன் காலேஜில் படிப்பவன் போலத்தான் இருந்தான். பார்த்த மறு கணமே அவர்களின் உறவு எப்படி இருக்கும் என்று அவனுக்குப் புரிந்தது.

இதயத்தில் முள்ளாய்த் தைத்த அந்தக் காட்சியையே சில கணங்களுக்கு வெறித்தவன், சட்டென்று உடைந்து போனான். சரசர வென்று கண்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது. சிறிதும் யோசிக்காமல் நிதானித்து, நினைத்துக்கூடப் பார்க்காமல் விமலாவைப் பற்றிக் கண்ட கனவுகளை, ஆசைகளைத் தன் கண்ணீர்த் துளிகளுடன் சேர்த்துத் துடைத்துப் போட்டுவிட்டு வேதனையுடன் உள்ளே போய், கட்டிலில் சரிந்தான் ராகவன்.

கல்யாண நாள். அவன் பவானியிலிருந்து புறப்படும்பொழுது குமிழியிட்டுப் பொங்கிய சந்தோஷங்களும், உற்சாகங்களும் எங்கோ போய் ஒளிந்துகொள்ள, போலியான முக மலர்ச்சியையும், உற்சாகத்தையும் முகத்தில் காட்டிக் கொண்டு தடுமாறிக் கொண்டிருந்தான் ராகவன்.

கல்யாண வேலைகளில் பங்கெடுத்துக் கொண்டிருந்தாலாவது தன் மனத்துக்கு ஆறுதலாக இருந்திருக்கும் போலிருந்தது. விகவோ அதற்கு இடங் கொடுக்கவில்லை.

போலியான உற்சாகத்தை நீடிக்க நீடிக்க அவன் மனத்துக்குள் பெரிதாய்க் களைத்துப் போனான். இனம் புரியாத வெறுமை அவன் மனத்தை ஆக்கிரமித்துக் கொள்ளக் கோபம் அவனுள் ஏகமாய்ப் பொங்கியது, தன் மேலேயே.

கூட்டம் வந்து கொண்டே இருந்தது. சிரிப்பும் கலகலப்பும் ஆர்ப்பரிப்புமாய் இருந்த அந்தக் கூட்டத்தில் மனத்தில் வெறுமையாய், ஒருவிதமான தாழ்வு மனப்பான்மை அவனைப் பற்றிக் கொள்ளத் தடுமாறிப் போனான் ராகவன்.

விதம் விதமாக பிளாஷ்கள் மின்னிக் கொண்டிருந்தன. 'இப்படி இருக்கும்போதுதான் புறப்படும்போது தான் காமிராவை எடுத்துக் கொண்டு கண்ட கனவுகளை நினைத்துப் பார்த்து, சோகமாய், வேதனையாய்த் தனக்குள் சிரித்துக் கொண்டான். வாங்கி வந்த பரிசுடன் வைத்திருக்கும் கேமிராவைப் பிரிக்கக் கூடத் தோன்றவில்லை அவனுக்கு. மினல்ட்டோவும் யாஷிகாவும் நிக்கானும்.... இப்படிக் கேமிராக்கள் அங்கே இருந்தபொழுது தன் பழைய 'பாக்ஸ்' காமிராவை எடுக்கவே வெட்கமாக இருந்தது அவனுக்கு.

கல்யாணம் முடிந்து கூட்டம் கலைந்து கொண்டிருந்தது. தற்செயலாக ராகவனைப் பார்த்த விக ஓர் ஆளை விட்டு ராகவனைக் கூப்பிட்டு வரச் சொன்னான்.

# மனசுக்குள்ளே நீர்க்கோலம்

'கமல்'



''ஏண்டா ராகவா... நீ பண்றது ஒனக்கே நன்னாயிருக்கா? நான் என்னடா உன்னைக் காணோம் காணோம் என்று பார்த்தா நீ என்னவோ ரொம்ப அந்நியனாட்டம் மூலையிலே நிக்கிறயே... ஏண்டா இப்படி?''

முதல் முறையாகச் சந்தோஷமும் பெருமையுமாக இருந்தது ராகவனுக்கு.

''இல்லே விசு... டயர்டா இருந்தது... அதான்...'' சமாளித்தான்.

அதற்குள் விசு தன் புது மனைவியிடம், ''வசந்தி, இவன்தான் என் அத்தை பிள்ளை ராகவன். என் க்ளோஸ் ப்ரண்ட்ஸ்லே ஒருத்தன். ரொம்ப கூச்ச சுபாவம். பாரேன் இது வரைக்கும் என் கண் முன்னாடி கூட வரலே இவன்...'' என்றான்.

அவள் கைகுவித்து அழகாகச் சிரித்தாள்.

மகிழ்ந்து போனான் ராகவன். சில கணங்களுக்குப் பின் தான் வாங்கி வந்திருந்த பரிசை எடுத்துக் கொடுக்க...

''ஏண்டா நீ கூட இப்படி ஃபார்மாலிடியா நடக்கணுமா... ஏன் ராகவா?'' என்று சிரித்தபடி வாங்கிக்கொண்டான் விசு.

சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவனாய், ''ஏய். ராகவா... ஆமா, நானும் மறந்தே போய்ட்டேன். என்னவோ ஊரிலே இருக்கிறப்போ தடபுடலா போட்டோ எல்லாம் எடுக்கறேன்னு சொன்னே... எடேன் இப்ப. என்னை எடுக்கிறயா?'' என்றான்.

சிலிர்த்துப் போனான் ராகவன். இத்தனை பேர் எப்படியெல்லாம் போட்டோ எடுத்திருந்தும், தன்னை நினைவு வைத்துக் கொண்டு... 'ஓ. விசு!... உண்மையிலேயே நீ ரொம்பப் பெரியவண்டா மனசாலே...'

இந்த லெட்டே போதுமென்று அவனுக்குத் தோன்ற, ''இதோ எடுக்கிறேன் விசு'' என்று தன் காமிராவைத் திறந்து வியூ பைண்டரில் அவர்களைப் பார்த்து அட்ஜஸ்ட் செய்து கொண்டிருந்தான்.

அவன் இப்படியும் அப்படியுமாக நகர்ந்து அட்ஜெஸ்ட் செய்து கொண்டிருக்க, சட்டென்று வேகமாக வந்த யாரோ ஒருவன் ராகவன் மேல் பலமாய் மோத, ராகவன் தடுமாறிக் கொண்டு விழப் போக அவன் கையிலிருந்த காமிரா தள்ளிப் போய் விழுந்தது.

காமிராவின் 'லாக்' கழன்று கொண்டு ப்லிம் வெளியே பிதுங்கிவிட லேசாக ஆடிக் கொண்டிருந்த வியூ ஃபைண்டர் இப்போது தனியாகக் கிடந்தது. ஒருவர் தூக்கி வைத்துக்கொண்டிருந்த குழந்தையின் கையிலிருந்த ஐஸ்கிரீம் எழுந்த ராகவனின் மேல் சிதற...

வெள்ளமாய்ப் பெருகிய அவமான உணர்வுகள் அவனை வதைக்க, பேதலித்துப்போய் நின்றான் ராகவன். சட்டென்று ஒரு கணம் எல்லோரும் அமைதியாகிப் போனார்கள். விசு வேகமாக ஓடி வந்து ராகவன் மேல் மோதிய ஆளைத் திட்டிவிட்டு...

சிலையாய் நின்ற ராகவனின் கையைப் பிடித்தபடி பரிதாபமாகக் கெஞ்சும் குரலில் ஆறுதலாக ''ஐ ஆம் வெரி ஸாரி ராகவா! வெரி ஸாரி ப்ளீஸ் டேக் இட் ஈஸி'' என்றான்.

''பரவாயில்லே விசு...'' என்று சிரமப்பட்டுச் சாதாரணமாகச் சொல்லிவிட்டு சப்தமான கெக்கெகப்புக்கள் எழ, குனிந்த தலையுடன் வெளியேறினான் ராகவன். அவன் போகும் சமயத்தில் எவனோ ஒருவன், ''ஒட்டை ஒடிசல் கேமிராவெல்லாம் எடுத்துக்கொண்டு ஏன்யா வராங்க இவன்களெல்லாம்...வந்தா இப்படித்தான்...'' என்று மெதுவாக அடித்த கமெண்ட் அவன் மனத்தில் தைத்தது. மற்றவர்களின் அனுதாபப் பார்வைகள் அவனை வதைக்கத் திணறிப் போனான்.

அடுத்த சில நிமிடங்களில் பெட்டியை எடுத்துக்கொண்டு ரயில்வே ஸ்டேஷனை நோக்கி வேகமாக விரைந்தான்.

அவன் இருந்த கம்பார்ட்மெண்ட் அவன் மனத்தைப் போலவே வெறுமையாக இருந்தது.

'யாரைக் குறை சொல்வது எதைக் குறை சொல்வதென்று நினைக்க ஆரம்பித்தவன், சட்டென்று நொறுங்கிப் போய், சிதறிப் போன அவன் கனவுகளின் சுமைகள் அவன் நெஞ்சில் அழுத்த, அந்தச் சுமைகளின் கனத்தைத் தாங்க முடியாமல் விம்மத் தொடங்கினான். விம்மிக் கொண்டே இருந்தான் அவன்.

''ராகவா! கல்யாணம் நல்லபடியா நடந்ததா? விமலா எப்படி இருக்கா? போட்டோவெல்லாம் ஒழுங்கா எடுத்தியா? வீடு எல்லாம் எப்படி? புதுசா இருக்கா?''

சங்கிலித் தொடராக அவன் அம்மா கேள்விகளை எழுப்ப ஒரு கணம் நிச்சலனமாய் அவளையே வெறித்தான். அவளிடம் சொல்லி அழுது தீர்க்க வேண்டும் போல் இருந்தது. பின் சட்டென்று தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டான். 'நான் அழுதது போல் அம்மாவையும் அழ வைக்க வேண்டுமா? வேண்டாமே!'

''ஓ... ப்ரமாதமா நடந்ததும்மா'' என்று போலியான உற்சாகத்துடன் சொல்ல, அவள் மகிழ்ந்து போனாள். பெருமையும் பூரிப்புமாய் அவள் உள்ளே போனவுடன் மீண்டும் கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டான் ராகவன்.

# சாது மிரண்டால்..

## ஒரு நாள், ஒரு சவால்

**சா**துவான மனிதர் சி. ஏ. ராஜரத்னம். இவரது ஆருயிர் நண்பர் திருவாளர் புகையிலை தான். அந்த நண்பரை ஒரு நாள் பார்க்காமல் இருப்பது முடிகிற காரியமா?

தம் பெல்டில் உள்ள பையில் தலை நீட்டிக் கொண்டிருந்த நண்பனைப் பெருமூச்சுடன் பார்த்தவாறு சவாலுக்கு ஒப்புக் கொண்டார். தமது பேத்திகள் ஆர்த்தி, ப்ரீதியுடன் சிறிது நேரம் பொழுது போக்கினார்.

பதினொரு மணிக்குச் சாப்பாட்டை முடித்த கையோடு விரல்கள் நண்பனைத் தேடின. மிகவும் சிரமப்பட்டுத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார்.

குடும்பத்துடனும் மருமகன் மோகனுடனும் கிரிக்கெட் காமெண்டிரி கேட்டார் ராஜரத்தினம். ''ஆகா! கவாஸ்கர் அதிர்ஷ்டக்காரன். சும்மா போடு போடுன்னு போடுகிறான். ஆனால் என்னைத்தான் துரதிர்ஷ்டம் பிடித்துக் கொண்டிருக்கிறது!'' என்றார் என்னைச் சுட்டிக்காட்டி! புகையிலை இல்லாததாலோ என்னவோ திடீரென்று ''கவாஸ்கர் பிரமாதமாய்க் கோல் போடுகிறான்'' என்று புது காமெண்டிரி கொடுத்தார். எல்லோரும் இதை ரசித்துச் சிரித்தார்கள். மாப்பிள்ளை மட்டும் கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டார்.

மணி இரண்டு. ஆவி பறக்கும் இட்டிலி வந்தது. ஆனால் ராஜரத்தினத்தின் மனம் வேறு எங்கோ அலைந்தது. தமக்கு ரொம்ப ரொம்பப் பிடித்தமான சைகாலின் பாடல் டேப்புக்களை ஒவ்வொன்றாகப் போட்டுக் கேட்டு மகிழ்ந்தார். டேப்புடன் சேர்ந்து உதடுகள் பாடல்களை முணுமுணுக்கின்றன. கண்களில் நீர் ததும்புகிறது. எல்லோரும் சீட்டாட்டத்துக்கு அமர்கிறார்கள். எப்போதும் ஜெயிக்கும் ராஜரத்தினம் தோல்வியையே சந்திக்கிறார். பேரன் அருண் இன்டல் செய்து கொண்டே இருக்கிறான். மருமகன் மோகன் நன்றிப் பெருக்குடன் என்னைப் பார்க்கிறார். இந்தப் பழக்கம் அடியோடு இவரை விட்டுப் போய்விடாதா என்று ஆசைப்படுபவர் போல.

மணி நாலு. ராஜரத்தினத்துக்கு மூட் வந்து விட்டது. ''சார், நான் ஸ்கூலில் படிக்கும் போது பாகவதர் பாட்டுன்னா கேட்கத் தவற மாட்டேன்'' என்று கூறி ''கிருஷ்ணா! முகுந்தா! முராரே!'' எனக் கான மழை பொழிகிறார். நான் பயந்து ஓடிவிடவில்லை.

'' நீங்கள் பத்திரிகைக்காரராயிற்றே! நேரத்தை வீணாக்க மாட்டீர்களே!'' என்று தந்திரமாக என்னை அனுப்பப் பார்த்தார். பலிக்கவில்லை.

பின்னர் புகையிலை போடுவதால் ஏற்படும் துன்பங்களை அவரே எடுத்துச் சொன்னார்: ''சார், புகையிலை போடுவதால் பல் மாத்திரம் கெடுவதில்லை. பல வியாதிகளுக்கு இதுதான் காரணமாக அமைகிறது. ஜீரண சக்தி அடியோடு போய்விடுகிறது. கான்ஸர் வருவதற்கு வாய்ப்பு அதிகம்'' என்றெல்லாம் அவர் புகையிலைப் புராணம் தொடரும் போதே, எதிர்த்த பெட்டிக் கடைப் பையன் வந்து, ''என்னங்க! நேத்தி சாயங்காலம் வாங்கின வெத்திலை, புகையிலைக்குக் கடையிலே காசு கேட்டாங்க'' என்றான். அவ்வளவுதான், ''நீ போடா, பின்னாலேயே இதோ வருகிறேன்'' என்று கூறியவாறே ராஜரத்தினம் ராஜ நடை போட்டார், கடையை நோக்கி. என்னை அவர் லட்சியம் பண்ணியதாகவே தெரியவில்லை.

அனுபவம்: **''சிக்கி''**



# நண்பரின் கேள்வியும் அன்பரின் பதிலும்





திரு சோ. சிவபாதசுந்தரம் எழுதியுள்ள ஒரு கடிதம்:

பாரதி விழா அதிர்ச்சி-1 என்ற தலைப்புள்ள கட்டுரையில் அதிர்ச்சிகரமான சில செய்திகள் காணப்படுகின்றன.

1. ம.பொ.சி. அவர்களின் ''வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு'' என்ற நூல் வெளியான காலத்திலும், சாகித்ய அகாதமிப் பரிசு பெற்ற காலத்திலும் ராஜேந்திரப் பிரசாத் இவ்வுலகத்தில் இல்லையே? அவர் எப்படி சிபாரிசு செய்திருக்க முடியும்?

2. மாநிலக் குழு சிபாரிசு செய்யாதிருந்து ஒரு தனிப்பட்ட பெரிய மனிதர், தமிழ் தெரியாத ஒருவர், தமது அதிகாரத்தை உபயோகித்து, நாட்டின் தலையாய ஒரு ஸ்தாபனத்தின் செயல் முறையில் தலையிட்டுத் தீர்ப்பை வேறு விதமாகத் திருப்பக் காரணமாயிருந்தார் என்றால், அது சாகித்ய அகாதமியின் நடுநிலைமைக்கும் கௌரவத்துக்கும் இழுக்குத் தேடுவதாகும்.

3. நண்பர் க. நா. சுப்பிரமணியம் சாகித்ய அகாதமியின் ''தமிழ் நாட்டைச் சேர்ந்த உறுப்பினர்'' என்ற செய்தி புதுமையானது. க. நா. சுவை சாகித்ய அகாதமியின் ஒண்ணும் நம்பர் விரோதி என்ற வகையிலே பல எழுத்தாளர்கள் அறிவார்கள். அகாதமியின் உள்ளே அவர் எப்போது அடி எடுத்து வைத்தார், சார்?

4. ம. பொ. சி. அவர்களின் தமிழ் இலக்கிய அறிவையும் ஈடுபாட்டையும் அறியாதவர்களோ உணராதவர்களோ 1967ல் அவர் விருது பெற்ற சமயத்தில் சாகித்ய அகாதமி உப குழுவில் இருந்ததாக நான் அறியேன்.

தமிழறிஞர் ம.பொ.சி. அவர்களுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் கொடுத்துக் கௌரவிக்கும் இந்தச் சமயத்தில் அவருக்கு வாழ்த்துக்கள்.

திரு சிவபாதசுந்தரம் எழுப்பியுள்ள கேள்விகளுக்கு ம. பொ. சி. அவர்களின் பதில்:

1. பேட்டிக் கட்டுரையில் டாக்டர் ராஜேந்திர பிரசாத் என்பதற்குப் பதிலாக டாக்டர் ராதாகிருஷ்ணன் என்று இருக்க வேண்டும். தவறு நேர்ந்திருக்கிறது.

2. டாக்டர் ராதாகிருஷ்ணன் என்று கூறும்போது இரண்டாவது கேள்வி அடிபட்டுப் போகிறது. அன்று அவர் சாகித்ய அகாதமியின் மத்தியக் குழுவிலும் இருந்தார்.

3. தமிழ் நாட்டைச் சேர்ந்த க. நா. சுப்பிரமணியம் தமிழ் நூல்களைப் பரிந்துரை செய்வதற்குத் தில்லியிலேயே உள்ள ''பிரதி நிதி'' என்று நான் கேள்விப்பட்டதைத்தான் கூறினேன்.

4. நண்பர் சிவபாதசுந்தரம் கூறியது போல் எனது மொழிப் புலமையை மாநிலக் குழுவினர் புறக்கணிக்க மாட்டார்கள் என்றால் எனது நூலை அனுப்பியிருந்தும் அதைத் தேர்ந்தெடுக்காததற்குக் காரணம் கேட்க வேண்டியிருக்கிறது.

பரிசு பெற்ற பிறகு பல்வேறு இந்திய மொழிகளில் எனது நூல் மொழி பெயர்க்கப் படாததற்கும் சாகித்ய அகாதமியின் விளக்கம் தேவைப்படுகிறது.

சிவபாதசுந்தரம் தம் கடிதத்தில் நான் டாக்டர் பட்டம் பெற்றதற்கு வாழ்த்துத் தெரிவித்ததற்கு நன்றி.




ஸ்ரீதர் நாராயணன், கல்கத்தா 29

⌘ மறக்க முடியாத சொற்பொழிவு என்ன என்று கேட்டால் எதைக் குறிப்பிடுவீர்கள்?

ப: எத்தனையோ பேர்களுடைய உரைகள் மனத்திலேயே இருந்தாலும், சுமார் 25 வருஷங்களுக்கு முன்பு பாரதி விழாவில் குமுதம் ஆசிரியர் எஸ். ஏ. பி. பேசிய சொற்பொழிவு ஓர் அழகிய கவிதையாகப் புது மலராக இன்றும் மனத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. 'உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனும் ஒரு கவிஞனே' என்ற எமர்சனின் பொன்மொழியுடன் தொடங்கிய உரை ஒரு சொற்கோலம். பிச்சைக்காரனுக்குக் காசு போடச் சொல்லும் குழந்தை, பஸ்ஸில் கிழவிக்கு உட்கார இடம் கொடுக்கும் இளைஞன் என்று பலர் பல சந்தர்ப்பங்



களில் கூறும் வாசகங்களில் கவிதைத் தன்மை திகழ்வதை அழகாக விவரித்தார்.

க. சி. குமார், விழுப்புரம்

⌘ ...லி அட்டைக்கு வார்னிஷ் போட்டால் என்ன?

ப: வார்னிஷ் போட்டால் போதை ஏறும் ...த்து உள்ளதே!




அ. சி. பாரதி, ஜோத்பூர்

⌘ க...ம் சோறு போடும் என்கிறீர்களே, எப்படி?

ப: ...ாண்ட்ரி வைத்திருப்பவர்கள் எவ்வளவு வசதியாக வாழ்கிறார்கள் என்று கவனித்தது இல்லையா?

எஸ். பி. வீரப்பா, நாகை

⌘ பேரம் பேசி வாங்குவதில் சாமர்த்தியசாலியா நீங்கள்?

ப: பம்பாயில் ஒரு பாலியெஸ்டர் ஷர்ட் வாங்கப் போனேன். கடைக்காரர் ஷர்ட் பீஸ் (2 மீட்டர்) 36 ரூபாய் என்றார். நான் மனத்துக்குள் கணக்குப் போட்டேன், மீட்டர் எவ்வளவு ஆகிறது என்று. என்னை அறியாமல் லேசாகப் பதினெட்டு என்று சொல்லிவிட்டேன் போலிருக்கிறது. கடைக்காரர், "சரி பிடியுங்கள்" என்று ஷர்ட் பீஸைக் கொடுத்துவிட்டார். (துணிக் கடைகளில் எப்படிக் கொள்ளை அடிக்கிறார்கள்!)

ரா. அனுராதா, சென்னை-10

⌘ இந்தப் பகுதியில் உங்களைப் பற்றி ஜம்பம் அடித்துக் கொள்வீர்களா?

ஊஹூம்! உலகிலேயே ஜம்பமாகப் பேசத் தெரியாத ஆசாமி நான் ஒருவன் தான். இதை நான் எங்கு வேண்டுமானாலும் ஜம்பமாகக் கூறத் தயார்!

ஏ. எம். இராஜாக், செங்கோட்டை

⌘ இன்றைய உலகில் பணம் கொடுத்து வாங்க முடியாதது எது?

ப: கடன்!

எஸ். சி. பாண்டியராஜ், திருச்சி

⌘ பசிவந்தால் பத்தும் பறந்து விடும் என்கிறார்களே, அவை என்ன?

ப: ஆ பத்து! பசியின்போது ஒருவன் ஆபத்தையும் பார்க்க மாட்டான் என்று எழுத்தாளர் ஏகாம்பரம் கூறுகிறார்.

ஆர். பூதலிங்கம், காஞ்சிபுரம்

⌘ உயிர் போனதும் என்ன நேருகிறது?

ப: ஒரு உயிர் போனதும், வருவது உயில்; உயிலாலும் சில சமயம் உயிர் போவதும் உண்டு!

கே. வேணிவாசன், புதுடில்லி

⌘ கடுகு கட்டுரைகள் சில சுவையாகவும் பல சுத்த அறுவைகளாகவும் அமைவது ஏன்?

ப: அதுதான் எனக்கும் புரியவில்லை — எப்படிச் சில சுவையாக அமைகின்றன என்று!

பரிசு பெறுபவர்:

**திருமதி கே. வேணி வாசன்,**
**93-1, எம். எஸ். ஃப்ளாட்ஸ்,**
**பேஷ்வா ரோட்,**
**புதுடில்லி - 110 001.**

எஸ். வெங்கட்ராமன், அம்பத்தூர்

✖ கே. கட்சித் தாவலை ஒடுக்க ஏன் சட்டம் கொண்டு வரவில்லை?

ப: என்னை ஏன் கேட்கிறீர்கள்? அப்படி ஒரு சட்டம் கொண்டு வரப் போவதாக நான் எப்போதாவது சொன்னேனா என்ன?

என். மணி, கூடலூர்

✖ கே. கல்யாணராமனில், கமலின் நடிப்பு எப்படி?

ப: ஒரு விழாவில் கமலைப் பற்றி பாலசந்தர் குறிப்பிட்டார்: ''கமல் திரைப்படத் துறையை இன்னும் இருபது முப்பது ஆண்டுகள் ஆட்சி செய்யப் போகிறார். அதைப் பற்றிச் சந்தேகம் இல்லை'' என்று. எனக்கும் சந்தேகம் இல்லை.

ரவிராஜ், போடிநாயக்கனூர்

✖ கே. டூரிங் டாக்கீஸ் எரிவது சர்வ சாதாரணமாகி விட்டதே.

ப: இது ஒரு Burning Problem என்பதை அரசு உணர்ந்து நடவடிக்கை எடுத்துள்ளதே!

சி. நடராஜன், திருப்பூர்

✖ கே. கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது இதன் விளக்கம் என்ன?

ப: இதுவரை 187 பேர் இதே மாதிரி கேள்வி கேட்டு இருக்கிறார்கள். இனி யாரும் கேட்க வேண்டாம். கடுகு சின்ன சைஸ் ரகமாக இருந்தாலும், தாளித்தால் காரச் சுவையில் குறையாது என்பதுதான் விளக்கம். இது என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா போன்ற நூற்றுக் கணக்கான புத்தகங்களைப் படிக்காமல் தரும் விளக்கம்!



டி. சிவமுருகன், கோவில்பட்டி

✖ கே. உங்களைத் துப்பறியும் சாம்பு மாதிரி, படம் போடுகிறார்களே. ஒரே வருத்தம், கடுகு. கமல் மாதிரி அழகு என்று நினைத்தேனே.

ப: கமல் மாதிரி அழகுதான். கம்மா 'விக்' வைத்துக் கொண்டிருந்தபோது ஆர்ட்டிஸ்ட் பார்த்தார். அப்படியே போட்டு விட்டார்!

ஆர். ராமன், ஆத்தூர்

✖ கே. காலையில் சந்திரனும் இரவில் சூரியனும் தோன்றினால் எப்படி இருக்கும்?



ப: அட பாவமே, உங்களுக்குத் தெரியாதா? இப்போது அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. நாம்தான் இரவைப் பகல் என்றும் பகலை இரவு என்றும் மாற்றிச் சொல்கிறோம்.

திருமதி உமா லட்சுமணன், விருதுநகர்

✖ கே. ஆடையில்லா மனிதன் அரை மனிதன் என்பதை ஒத்துக் கொள்கிறீர்களா?

ப: இது பற்றி என் நண்பர் பிரபல எழுத்தாளர் ஏகாம்பரத்தைக் கேட்டேன். அவர் கூறிய விளக்கம்: ஆடையில்லாத மனிதன் அறை மனிதன் என்பது தான் சரியான வாசகம். அதாவது ஆடை இல்லாதவன் வெட்கப்பட்டுக் கொண்டு அறைக்குள்ளேயே இருப்பான் என்பது இதன் பொருள்.

மு. பாஸ்கரன் - ராஜ், புதுவை

✖ கே. 'சோ'வைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

ப: என்னைப் பற்றி அவர் என்ன அபிப்பிராயம் வைத்திருக்கிறாரோ, அதுவேதான்.

வசந்தா கோவிந்தன், பங்களூர்-38

✖ கே. பெண்களை பஸ் ஓட்டுனர்களாக நியமித்தால் என்ன ஆகும்?

ப: பஸ்களில் பின் பாதி காலியாக இருக்கும். முன் பாதியில் மூச்சுத் திணறும்.

எஸ். விஜயன், இராஜபாளையம்

✖ கே. வைத்தியக்காரன் பத்தும் செய்வான். அரை வைத்தியன்?

ப: ஐந்துதான் செய்வான். அவன்தான் அரைப் பைத்தியமாயிற்றே!

பா. பாரதி சுவாமிநாதன், தஞ்சாவூர் 7

✖ கே. காந்தி சமாதியைக் கங்கை நீரால் கழுவுவது பற்றி?

ப: சிலர் காந்தி சமாதியைக் கழுவுகிறார்கள். பலர் காந்தியைக் கை கழுவுகிறார்கள்.

✖ கே. விளிட்டருக்கும் நுக்கலுக்கும் என்ன வித்தியாசம்?

ப: Size, Price!

பரிசு பெறுபவர்:

**டி. சிவமுருகன்,**
**13-சி, அய்யாதுசாமி லேன்,**
**ஜோதி நகர்,**
**கோவில்பட்டி.**



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## திருச்சானூரிலுள்ள பத்மாவதிதேவிக்கு வருஷாந்திர பிரம்மோத்ஸவம்

### 1979 நவம்பர் 16லிருந்து 24 நவம்பர் வரை

திருச்சானூரிலுள்ள பத்மாவதி கோயில் திருப்பதியிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. புராணக் கதைகளின் படி பத்மாவதி தாயார் கோயிலுக்கருகிலுள்ள புஷ்கரணியிலுள்ள தங்கத் தாமரையில் சுக்ல பஞ்சமி தினத்தன்று, விருச்சிக மாதம் உத்தராஷாட நட்சத்திரத்தில் குடி புகுந்தாள். ஒவ்வொரு வருஷமும் பத்மாவதி தாயாரின் பிரம்மோத்ஸவம் கிருஷ்ண பக்ஷத்துக்குப் பதினோரு நாட்களுக்குப் பிறகு, அதாவது விருச்சிக மாதத்தில் ஒன்பது நாட்கள் கொண்டாடப்படும். தாயாரின் பிறந்த நாள் சுக்ல பஞ்சமி தினத்தில் அவப்ருஸ்தஸ்தானத்தோடு கொண்டாடப்படும். இந்த வருஷம் பிரும்மோஸ்தவம் நவம்பர் 16ந் தேதியிலிருந்து தொடங்கி நவம்பர் 24ந் தேதி அன்று முடிகிறது.

நவம்பர் 24ந் தேதி பஞ்சமி தீர்த்த தினத்தில் ஏழு மலைகளின் தெய்வம் ஏழுமலையான் எல்லாவித சம்பிரதாயங்களோடு பிரும்மாண்டமான ஊர்வலத்தில் திருச்சானூருக்கு எடுத்துச் செல்லப் படுவார். அவரது ஊர்வலத்தில் மாலைகள், புடவைகள், ரவிக்கைத் துண்டுகள், வெற்றிலை, மஞ்சள், குங்குமம், பணியாரங்கள் தேவிக்குரிய பொக்கிஷங்களைச் சீர்வரிசையுடன் எடுத்துச் செல்வார்கள். இந்தப் புண்ணிய தினத்தன்று பல்லாயிரக்கணக்கான சேவார்த்திகள் திருச்சானூருக்கு விஜயம் செய்வார்கள். இந்தக் கொண்டாட்ட வைபவத்தில் முக்கியமான தினங்கள்:

புதன் : நவம்பர் 21ந்தேதி கருடசேவை

வெள்ளி : நவம்பர் 23ந்தேதி ரதோத்ஸவம்

சனிக்கிழமை : நவம்பர் 24ந்தேதி பஞ்சமி தீர்த்தம்

திருமலைக்குச் செல்லும் புனித யாத்திரை திருச்சானூரில் பத்மாவதி தாயாரின் தரிசனத்துக்குப் பிறகே பூர்த்தியானதாகக் கருதப்படுகிறது. திருமலையில் ஏழுமலையான் தரிசனத்துக்கும், திருச்சானூரில் பத்மாவதி தாயாரின் தரிசனத்துக்கும் இந்தப் புண்ணிய தினத்தில் அனைத்துப் பக்த கோடிகளையும் வரவேற்கிறோம்.

எக்ஸிக்யூடிவ் ஆபீசர்
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி



# நீ சிரித்தால் நான் சிரிப்பேன்

## படவிமர்சனம்

இரு சகோதரர்கள். இவர்களுக்கு ஒரு சகோதரி. சகோதரர்களில் ஒருவன் கெட்டவன். மற்றவன் நல்லவன். இரண்டு பேருக்குமே சகோதரியின் மீது கொள்ளையான பாசம். குடும்பமோ ஏழைக் குடும்பம். நல்லவனான அண்ணன் தன் சம்பாத்தியத்தில் சகோதரிக்குத் திருமணம் செய்து வைக்கும் முயற்சியில் ஈடுபடுகிறான். ஊரார் வெறுக்கும் ரௌடியான தம்பியினால் பல தடவை அது தடைப்படுகிறது. கலியாணத் தரகன் ஒருவன் ஏமாற்றி ஒரு குருட்டு மாப்பிள்ளையை இவர்கள் தலையில் கட்டி விட்டுப் போய்விடுகிறான். தன் சகோதரிக்குக் குருட்டுக் கணவன் வாய்த்து விட்டதை நல்ல சகோதரனால் தாங்கிக் கொள்ள முடியாமல் இடிந்து போகிறான். தன் பேச்சைக் கேட்காமல் குருட்டுக் கணவனுடன் வாழப் போகும் சகோதரியையும் வெறுக்கிறான். கெட்டவனான மற்றொரு அண்ணனோ தன் சகோதரியின் குருட்டுக் கணவனைப் பழிவாங்கத் துடிக்கிறான்(?) முடிவு தன் கண்களையே சகோதரியின் கணவனுக்குத் தானமாக வழங்கித் தியாகியாகிறான். இதுதான் 'சிரிக்கும்' கதை.

மாணிக்கம் (ஸ்ரீகாந்த்) வழி தவறிப் போனதற்கான சூழ்நிலையையோ, தன் சகோதரியிடம் உள்ள பாசத்தின் அழுத்தத்தையோ வலுவாக விளக்கவில்லை. மாணிக்கத்தைக் காதலிக்கும் சீதாவாக சத்தியப்பிரியா வருகிறார். தேவையில்லாத, கதையோடு ஒட்டாத பாத்திரம். சினிமா [illegible]லாவுக்குத் தூவப்பட்ட கருவே[illegible]. குருட்டு மாப்பிள்ளை ரவி (சிவசந்திரன்)யும் அவர் த[illegible]த வெங்கடாசலமும் (மேஜர்) இந்த ஏமா[illegible]றுக்குத் தாங்கள் பொறுப்பல்ல என்று உருக்கமாக அறிவித்தும் மாணிக்கம் கத்தியைத் தீட்டுவது — அதுவும் பார்வையற்ற ரவியைக் கொல்ல வீராவேசமாக அலைவது விவேகமற்ற செயல். தரகர் பொன்னம்பலமாக வி. கே. ராமசாமி படத்தின் ஆரம்பத்தில் வந்து கலகலப்பூட்டுகிறார். படத்தில் அவர் வரும் காட்சிகள்தான் கொஞ்சம் விறுவிறுப்பூட்டுகின்றன.

அப்பாவி அண்ணனாக ரத்தினம் (பீலிசிவம்) சோகம் வழியும் முகத்துடன் படம் முழுதும் தோன்றுகிறார். சட்டைக்காரப் பெண்ணாகச் சச்சுவும், அவரைக் காதலிப்பவராக மகேந்திரனும் படத்தின் தொய்வை அதிகமாக்குகிறார்கள். தேவையில்லாத காட்சிகள். குருடனை மணக்கும் குமாரியாக பிரபா வருகிறார். ஆமாம், வருகிறார்! கதை, வசனம், டைரக்ஷன், — பாட்டு, காமிரா எதுவும் சொல்லும்படியாக இல்லை.

நம்மையும் சிரிக்கவைக்கவில்லை, அவர்களும் சிரிக்க முடியாது.

—கௌசிகன்

---

தப்பான காரியத்தைச் செய்ய சரியான வழியே கிடையாது!

— ஆஸ்கர் ஆர்னல்ட்

— பி.என்.ஆர்



எச்சரிக்கை:

# தென்காசிக்கு ஆபத்து!

தென்காசி தாலுக்காவில், திருநெல்வேலி — குற்றாலம் ரோட் இடையிலுள்ள மாறாந்தாய் என்கிற கிராமம் அணுசக்தி நிலையங்களினின்று வெளியாகும் கதிரியக்கம் உள்ள அணுகழிவுப் பொருள்களை (Nuclear waste) அடைத்து வைக்கச் சரியான இடம் என்று 'ஜியாலஜிகல் சர்வே ஆஃப் இந்தியா' வைச் சேர்ந்த நிபுணர்கள் தேர்ந்தெடுத்துள்ளனர். இதற்காக இக்கிராமத்தில் 150 ஏக்கர் நிலத்தை வாங்க இருக்கின்றனர். சென்னை—கேரள அணுமின் நிலையங்களிலிருந்து வெளிப்படும் கழிவுப் பொருட்கள் இங்கு அடைத்து வைக்கப்படும். அணுசக்தி நிலையங்களில் இருக்கும் ஒவ்வொரு பெரிய Reactorம் ஒவ்வொரு ஆண்டும் சுமார் 30 டன் முதல் 40 டன் வரையிலான கழிவுப் பொருளை வெளியேற்றும்.

—செய்தி: இந்தியன் எக்ஸ்பிரஸ் 22-9-79

அமெரிக்காவில் அணு சக்தி நிலையங்களினின்று வெளியாகும் கழிவுப் பொருள்களினால் அங்கு நிலவும் சிலபிரச்னைகளை ஆராய்ந்து அக்டோபர் 79 இதழ் Span பத்திரிகை ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தது. அக் கட்டுரையினின்று சில முக்கிய அம்சங்கள்:

✱ இதுபோன்ற அணு கழிவுப் பொருள் அடைத்து வைக்கும் இடங்கள் குறித்து அமெரிக்க மக்கள் பலத்த ஆட்சேபனை எழுப்பி வருகிறார்கள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''அணுசக்தி நிலையங்களிலிருந்து வெளியாகும் முக்கிய கழிவுப் பொருள்கள் எரிக்கப்பட்ட உருளைகள் வடிவில் இருக்கும். இவைகளில் யுரேனியமும் அதைச் சேர்ந்த சில உப பொருள்களும் (புளுடோனியம் உட்பட) இருக்கும். இப்பொருள்கள் மனித உயிருக்கு விஷத்தை அளிக்கும் சக்தியை இரண்டு லட்சம் ஆண்டுகள் பெற்றிருக்கும். அணுசக்தி நிலையங்களிலிருந்து வெளியாகும் மற்றொரு கழிவுப் பொருள் கதிரியக்கம் உள்ள அயோடினாகும். இது தைராய்ட் சுரப்பி சம்பந்தப்பட்ட புற்று நோயை மனித உடலில் தோற்றுவிக்கும் திறமை வாய்ந்தது.

கழிவுப் பொருள்களை வைக்கும் இடங்களில் ஏற்படும் விபத்துக்கள் கவலையை அளிப்பவையாக உள்ளன. வாஷிங்டனில் ஹான்ஸ்போர்ட் மிலிடரி ரிசர்வேஷனில் ஐந்து லட்சம் காலன் அணு சக்தி கழிவுப் பொருள் கசிந்து சுற்று வட்டார பூமியில் கலந்து விட்டதால் இத்தகைய கழிவுப் பொருள்களைச் சேகரித்து வைக்கும் இடங்களுக்கு அருகில் வசிக்கும் மக்கள் இதற்குப் பெருத்த ஆட்சேபனை எழுப்புகின்றனர்.

அணுசக்தி தொழிற்சாலையின் கடினமான பிரச்னை கழிவுப் பொருள்களை எப்படி அப்புறப்படுத்துவது என்பதுதான்.

நிரந்தரமான பாதுகாப்பான ஒரு தீர்வு 1983க்குள் காணாவிடில் சில கழிவுப் பொருள் பாதுகாப்பு இடங்களைக் கட்டாயமாக மூடிவிட நேரிடும் என்று அமெரிக்க அரசாங்க விஞ்ஞானிகள் கூறியுள்ளனர்.

சமீப காலம் வரை இப்பிரச்னைக்குத் தீர்வு காண அமெரிக்க அரசு ஒன்றும் செய்யாமல் இருந்தது. ஆனால் இவ்வாண்டு இது சம்பந்தமாக ஏராளமாகச் செலவிட இருக்கிறது. கார்ல்ஸ்பாட், நியூ மெக்ஸிகோ ஆகிய இடங்களில் உள்ள உப்பளங்களின் அருகில் வெகு ஆழத்துக்குப் பள்ளங்கள் எடுத்து, அணு சக்திக் கழிவுப் பொருள்களை நிரந்தரமாக அடைத்துவைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. திட்டமிட்டபடி செய்தாலும் இது நடைமுறையில் அமலுக்கு வர 1988ம் ஆண்டு ஆகும். ஆனால் இதற்கு முன் இப்பிரதேசங்களில் உள்ள மக்கள் பலத்த ஆட்சேபனை தெரிவித்திருப்பதோடு மட்டுமின்றி, சட்ட மன்றங்களில் வழக்குகளும் தொடுத்துள்ளனர்.

அதிகக் கதிரியக்கம் இல்லாத அணு சக்திக் கழிவுப் பொருள்களை அடைத்து வைக்க அரசாங்க அனுமதி பெற்ற சில இடங்கள் உள்ளன. ஆனால் சமீபத்தில் அமெரிக்காவின் எட்டுக்கு மேற்பட்ட மாகாணங்கள் இத்தகைய கழிவுப் பொருள்களைச் சேகரித்து வைக்கும் இடங்களுக்கும் தடை விதித்துள்ளன.

அமெரிக்காவுக்கே பிரச்னையாக இருப்பது தென்காசிக்கு ஆபத்தாக முடியாதா?

-ரங்கா

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lenka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு